# ஞான வழி

183

விவேகானந்த கேந்திரம்
கிராம முன்னேற்றத் திட்டம்
பரமக்குடி-623 707.



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள் அருளியது

ம.செ

வானதி
பதிப்பகம்

# ஞான வழி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகளின்
அருள் வாக்குகள்



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

10/1




ACC NO: 13235

# ஞானக் கருவூலம்

நம் பாரத நாட்டில் பல மதங்கள் தோன்றின. அவற்றுக்கெல்லாம் மூலம் இந்து மதம். அதாவது வேதத்தை அடிப்படையாகக் கொண்ட வைதிக மதம். இதிலிருந்துதான் புத்தம், சமணம், வைணவம், மாத்வம் எல்லாம் தோன்றின. அவை எல்லாவற்றுக்கும் இந்து மதத்திலிருந்துதான் பக்தகோடிகள் கிடைத்தனர். அது மட்டுமல்ல, வெளியிலிருந்து வந்த கிறிஸ்தவம், இஸ்லாம் எல்லாவற்றுக்கும் இங்கிருந்துதான் போனார்கள்.

அத்தனை மதங்களுக்கும் மக்களைக் கொடுத்தும் இந்து மதம் இன்றும், என்றும், குறைவுபடாமல் நிறைந்து நிற்கிறது; வானையும் கடலையும் போல்.

அப்படிப்பட்ட இந்து மதத்தின் ஜகத்குருவாகிய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதியான ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளின் அருளாசியின் உருவமே இந்த 'ஞான வழி' என்னும் நூல்.

மாயையால் 'தன்னை' மறந்து இடர்ப்படும் மனித ஜன்மம் ஆத்ம ஞானத்தை அடைந்து, சம்சார பந்தத்திலிருந்து விடுபட வேண்டும். அதற்கு ஞான விழிப்பு ஏற்பட

வேண்டும். கண்களை மூடிக்கொண்டு, ஒளிக்கு நடுவில் இருந்தாலும் இருள் சூழ்ந்திருப்பதாகத்தான் பிரமை ஏற்படும். அந்தப் பிரமை ஒழிய, கண்களைத் திறந்து ஞான விழிப் படைய இந்த நூல் வழி காட்டும்.

உருவத்தால் சிறியதுதான். 'கடுகைத் துளைத்து ஏழு கடலைப் புகுத்தியது' போன்ற அடர்த்தி (Density) இந்த நூலுக்குண்டு. ஆல விருட்சத்தின் அகன்ற அடி மரமும், கிளைகளும், கொம்புகளும், இலைகளும், பூவும், காயும், கனியும், அந்தக் கனியின் நிறமும் உருவமும், அந்தக் கனிக்குள் அடங்கியுள்ள இன்னும் பல்லாயிரம் விதைகளும், எப்படி ஒரு சிறிய ஆல விதையில் அடங்கியுள்ளனவோ, அப்படி ஒரு பெரிய பிரம்மாண்டமே இந்தச் சிறிய புத்தகத்துள் ஞானக் கருவாக அடங்கியுள்ளது.

படித்து, ஞான வழிப்படி நடந்து, பண்பும் பயனும் அடைய வேண்டியது நமது கடமை. இந்நூலை வானதி பதிப்பகத்தில் வெளியிட அருள் பாலித்த ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வர ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளுக்கு வணக்கத்துடன் கூடிய நன்றி.

ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்.

# குரு பரம்பரை வணக்கம்

நாராயணம் பத்மபுவம் வஸிஸ்டம்
சந்திம்ச தத்புத்ர பராசரம் ச |
வ்யாஸம் சுகம் கௌடபதம் மஹாந்தம்
கோவிந்த யோகீந்த்ரம் அதாஸ்ய சிஷ்யம் ||
ஸ்ரீ சங்கராசார்ய மதாஸ்ய பத்மபாதம் ச
ஹஸ்தா மலகம் ச சிஷ்யம் |
தம் தோடகம் வார்திக காரமன்யான்
அஸ்மத் குருன் ஸந்ததமான தோஷ்மி ||

நாராயணர், பிரம்மா, வசிஷ்டர், சக்தி, அவருடைய புத்திரர் ஆகிய பராசரர், வ்யாஸர், சுகர், மஹாஞன கௌடபாதர், கோவிந்த யோகீந்நரர், அவருடைய சிஷ்யராகிய ஸ்ரீ சங்கராசாரியர், அவருடைய சிஷ்யர்களான பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், வார்திககாரர் என்ற ஸுரேச்வரர் ஆகிய நமது குரு பரம்பரையினரை எப்பொழுதும் இதயபூர்வமாக வணங்குகிறோம்.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே

*—திருமூலர் திருமந்திரம்*

10/1

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய
ஸ்வாமிகள் அருளும்

# ஞான வழி

# வேதாந்தம்

வேதத்தினுடைய அந்தம் வேதாந்தம். வேதம் என்ற சொல்லிற்கு அறியாததையும் அறிவிப்பது என்று பொருள். நாம் நமது கண்களால் பலவகைப் பொருள்களைப் பார்க்கிறோம். காதால் சிலவற்றைக் கேட்கிறோம். கையால் தொடுகிறோம். மூக்கினால் நுகர்கிறோம். நாக்கால் ருசி பார்க்கிறோம். இவைகளையெல்லாம் பிரத்யக்ஷ பிரமாணத்தின் மூலம் தெரிந்து கொள்கிறோம்.

ஒரு முறை பிரத்யக்ஷமாய் அனுபவித்த பிறகு மறு முறை அந்தப் பொருளின் ஒரு பகுதியைப் பார்க்கும் பொழுதோ, கேட்கும் பொழுதோ, நினைக்கும் பொழுதோ கூட அந்தப் பொருளினுடைய பரிபூர்ணத் தன்மை நமக்குத் தெரிந்துவிடுகிறது. ஆனாலும் பிரத்யக்ஷமாகத் தெரிவதில்லை. முன் அனுபவித்ததின் காரணமாக யூகித்துத் தெரிந்துகொள்கிறோம். இதைத்தான் "அனுமானப் பிரமாணம்" என்பார்கள்.

அனுமானப் பிரமாணம் எப்பொழுதும் பிரத்யக்ஷ பிரமாணத்தை அனுசரித்துத்தான் ஏற்படும். உதாரணமாக ஓரிடத்தில் நெருப்பையும் புகையையும் ஒன்று சேர்ந்திருக்கக் கண்ணால் கண்டிருக்கிறோம். சிறிது காலத்திற்குப் பிறகு

நெருப்பைக் கண்ணுல் காணவில்லை. ஆனுல் புகை மாத்திரம் வெகு தூரத்தில் தென்படுகிறது. அப்பொழுது அந்தப் புகையைப் பார்த்து அந்த இடத்தில் நெருப்பு இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறேம். முன்னதாகப் புகையையும் நெருப்பையும் சேர்த்தே பார்த்து இருப்பதுவே அதற்குக் காரணம். காணுத நெருப்பை இருப்பதாகத் தீர்மானிப்பதற்கு உதவியாய் இருப்பது புகை.

அதுபோல் நாற்காலி, பெஞ்சு போன்ற அநேக மரச் சாமான்கள் இருக்கின்றன. இந்தச் சாமான்களை ஒருவன் செய்கிறுன். அதைப் பார்த்திருக்கிறேம். ஆகவே வேறெரு இடத்தில் இதே மாதிரிச் சாமான்களைப் பார்க்க நேரும் பொழுது இதை ஒருவன் செய்திருக்க வேண்டும் என்ற எண்ணம் நமக்கு வருகிறது. இதேபோல்தான் உலகில் கண்ணுல் காணக்கூடிய பொருள்கள் எத்தனை இருக்கின்றனவோ, அத்தனையும் ஒவ்வொருவர் மூலமாகச் செய்யப் பட்டிருக்கிறது. அதனுல் இந்த உலகம் முழுவதையும் உண்டாக்கியவன் ஒருவன் இருக்க வேண்டும்; ஒருவனுல் ஆக்கப்படாமல் ஒரு வஸ்துவும் இருக்க முடியாது; அவன் தான் இறைவன்; அவன்தான் பரமாத்மா. அவனுடைய சக்தியினுல்தான் இத்தனையும் இயங்குகின்றன. ஆனுல் அந்தச் சக்தி கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அந்தச் சக்திக்கு ஆதாரமான பரம்பொருளும் கண்ணுக்குப் புலப் படுவதில்லை.

சக்தியும் சக்திக்கு ஆதாரமான வஸ்துவும் சாமான்யமாக வேருகத் தெரிவதில்லை. ஆனுல் சக்தியும் ஆதார வஸ்துவும் வேருகவே இருக்கின்றன. உதாரணமாக கல்கண்டும், அதில் உள்ள இனிப்பு இரசமும் வேருகத் தெரிவதில்லை; ஆனுலும் கல்கண்டில் இனிப்பு ரசம் இருக்கிறது என்கிறேம். அதுபோல உலகைப் படைத்துக் காக்கும் சக்திக்கு ஆதாரமாகப் பரமாத்மா இருக்கிருர்.

ஒரு மனிதனுடைய நிழலானது அவனை அண்டியிருந்தாலும் அவனைக் காட்டிலும் வேருகத் தெரிந்தாலும், மனிதனுடைய உயரத்தைக் காட்டிலும் நிழலின் உயரம் சிறியதாகவும், பெரியதாகவும் எப்படி வளர்ந்தாலும் குறைந்தாலும் மனித வடிவம் இன்றி, நிழலென்பது கிடையாது. நிழலுக்கு ஆதாரம் மனித உடல். அதுபோல, பரமாத்மாவை ஆதாரமாய்க்கொண்ட மாயா சக்தியினுல் இத்த உலகம் படைக்கப்பட்டும் காக்கப்பட்டும் அழிக்கப் பட்டும் வருகிறது. நிழலினுடைய குணங்கள் ஒன்றும் மனித உடலைப் பாதிக்காது. அதுபோலவே மாயையினுடைய குணங்கள் ஒன்றும் பரமாத்மாவைப் பாதிக்காது. ஆகையினுல் பரமாத்மாவின் சம்பந்தத்தினுல் மாயா சக்தியானது உலகைப் படைத்துக் காத்து அழிக்கிறது.

இந்த உலகம் முழுவதும் மாயையினுடைய கார்யம், மாயையைத்தான் அஞ்ஞானம் என்கிறேம். அஞ்ஞானத்தைத்தான் அறியாமை என்கிறேம். அறியாமையினுல்தான் உண்மை அறிவு ஏற்படாமல் இருக்கிறது. உண்மை அறிவு ஏற்படாதபோது, பொருளின் தன்மை தெரிவதில்லை. பொருளின் தன்மை தெரியாதபோது மாற்றுப் பொருளையே நிஜமான பொருளாக நினைக்கிறேம். அப்பொழுது அந்தப் பொருளினுல் ஏற்பட்ட சுக, துக்கங்களும் நிஜமாகவே நினைக்கத் தோன்றுகிறது. அப்படியே நினைக்கிறேம். ஆகவே நம்முடைய சுக, துக்கத்திற்குக் காரணம், உண்மைப் பொருளின் தன்மை தெரியாமல் இருப்பதுதான். அதற்குக் காரணம் அறியாமை. அறியாமைதான் அஞ்ஞானம். அந்த அஞ்ஞானமே மாயை. மாயைக்கு ஆதாரம் பரமாத்மா.

இந்தப் பரமாத்ம ஞானத்தினுல் மாயை அகலும். அப்பொழுது இந்தப் பொருள்களெல்லாம் அறியாமையினுல் ஏற்பட்ட நிஜமல்ல என்ற தெளிவு ஏற்படும். அப்பொழுது அதனுல் ஏற்பட்ட சுக, துக்கம் நிஜமல்ல என்பதும் தெரிய

வரும். உதாரணமாக, சொப்பனம் காண்கிறோம். சொப்பனத்தில் விழிப்பின் நிலை இல்லை; ஆனாலும் நினைப்பு உண்டு. நினைப்புக்கு ஆதாரம் விழிப்பு. விழிப்பின் அனுபவத்திலிருந்து நினைப்பு வருகிறது. அந்த நினைப்பு கனவாக மாறுகிறது. கனவு நிஜம்போல் கனவில் தெரிகிறது. ஆனால் விழித்துக்கொண்டவுடன், அறிவு வந்தவுடன் நினைப்பு கனவு என்று தீர்மானிக்கிறது. கனவில் அனுபவிக்கும் இன்ப, துன்பமெல்லாம், அறியாமையே—பொய்யே என்று பிறகு தெரிய வருகிறது. ஆனால் அனுபவிக்கும்பொழுது, எதுவரையில் கண்விழிப்பு ஏற்படுகிறதோ அதுவரையில் நிஜம் என்று கனவில் ஓர் உணர்வு ஏற்படுகிறது.

அதுபோல எதுவரையில் அறியாமையில் இருக்கிறோமோ அதுவரையில், எல்லாம் நிஜம்தான். பரமாத்ம ஞானம் வந்த பிறகு, எல்லாம் பொய்—மாயா காரியம் என்று தெரியவரும். எதுவரையில், மாயா கார்யம்—பொய் என்று தெரியவில்லையோ அதுவரையில், அந்தக் கார்யங்களெல்லாம் செய்துகொண்டு வரவேண்டும். அதுவரையில் நிஜமே அந்த நிஜத்தை "வ்யாவஹாரிக நிஜம்" என்பார்கள். கனவில் எதுவரையில் கண்டோமோ அதுவரையில் நிஜம். அதை "ப்ராதிபாஸிக நிஜம்" என்பார்கள். பரமாத்ம ஞானத்தை "பாரமார்த்திக நிஜம்" என்பார்கள். இந்த விஷயங்களை விளக்குவதே வேதாந்தம்.

பரமாத்மா எங்கும் நிறைந்திருப்பவர். அவர் சம்பந்தம் இல்லாத ஒரு வஸ்துவும் கிடையாது. ஏனென்றால் பரமாத்மா ஒருவர்தான் இருக்கிறார். அவருடைய இருப்பினால்தான் மற்ற எல்லா வஸ்துக்களுமே இருக்கும் தன்மையை அடைந்து இருக்கிறது. உதாரணமாக தூரத்தில் இருக்கும் கிளிஞ்சலைக் காணுகையில் வெள்ளியின் எண்ணம் நமக்குத் தோன்றுகிறது. அந்தக் கிளிஞ்சலில் உள்ள பளபளப்பு நமக்குக் கிளிஞ்சலை வெள்ளியாகத் தோற்றுவிக்கிறது. பளபளப்புடன் வெள்ளியைத் தனியாய் நாம் பார்த்திருக்கிறோம். இங்கேயும் அதே

பளபளப்பைக் கண்டவுடன் நமக்கு வெள்ளியின் நினைப்பு வந்துவிடுகிறது. அந்த வெள்ளியின் நினைப்பில் அந்த வஸ்துவைக் கையால் எடுக்கிறோம். உன்னிப்பாய்ப் பார்க்கிறோம். அங்கு பளபளப்புத் தென்படுகிறது. வெள்ளி தென்படவில்லை. அப்பொழுதும் வெள்ளியின் நினைப்பு மாறினபாடில்லை. இந்த நிலையில் கிளிஞ்சலை கீழே போட்டு விடுகிறோம். காரணம்—நாம் எதிர்பார்த்த வெள்ளி அதில் இல்லாததினால் அதை நாம் கீழே போட வேண்டிய நிலை வந்துவிடுகிறது.

இதேபோல் பரமாத்மாவினுடைய இருப்பு தன்மையினால், இந்த உலகம்—உலகில் உள்ள பொருள்கள் எல்லாமே இருப்பு தன்மையை அடைந்திருக்கின்றது; தனியாக உலகம்—அந்த உலகிற்குள்ள தன்மை ஒன்றும் கிடையாது. ஆகவே பரமாத்மா என்ற ஆதாரத்தில், உலகம், உலகிலுள்ள பொருள்கள், அதன் தன்மைகள் எல்லாமே மாயா சக்தியினால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; ஆதார வஸ்து ஒன்றுதான், நிஜமான—அழிவில்லாத வஸ்து. பாக்கியெல்லாம் கற்பனையானது. கற்பனைக்கு அழிவு உண்டு, கற்பனை கலைந்தவுடன் ஆகவே இந்த உலகம்—உலகத்திலுள்ள பொருள்களுக்கு அழிவு உண்டு. அதுபோல் நம்முடைய வாழ்க்கையில் நடக்கக்கூடிய சுக துக்கங்களும் சாஸ்வதமல்ல; அவைகளும் அழிந்துவிடும்.

உதாரணமாக, விளக்கு ஏற்றும் வேளையில்—இருட்டும் சமயத்தில்—பொருளின் உண்மைத் தன்மை தெரியாமல் இருக்கும் நிலையில், ஒரு கயிற்றில் உள்ள வளைவுகளைக் கண்டு திகைத்துப் பாம்பு என்று நினைத்துப் பயப்படுகிறோம். பிறகு கழி—கம்புகளை எடுத்து வந்து அதை அடிக்கவும் முற்படுகிறோம். பிறகு நெருங்கிப்போய் விளக்கின் உதவி கொண்டு பார்க்கையில், அங்கு பாம்பு தென்படவில்லை; கயிறுதான் தென்படுகிறது. ஆனாலும் பாம்பின் நினைப்பு மனத்திலிருந்து அகலுவதில்லை. பாம்பு இல்லாத ஒன்றில்

பாம்பு இருப்பதாகக் காணப்பட்டது. ஆதார வஸ்துவின் உண்மை அறிந்தவுடன் தோன்றினதெல்லாம் மனத்தில் தோன்றினாலும், உண்மையாக இல்லை. பொய்யாகத் தோன்றுகிறது என்ற எண்ணமும் ஏற்படுகிறது. இதுபோலத் தான் உலகம்—உலகில் உள்ள பொருள்கள் எல்லாமே தோன்றுகிறது. நிஜமாக—உண்மையாக விசாரித்துப் பார்த்தால், உலகமோ—உலகிலுள்ள பொருள்களோ ஒன்றுமே இருக்காது. ஆனால் இருக்கும். நினைப்பு மாத்திரம் இருக்கும். அப்படி நினைப்பு மனத்தில் இடம் பிடித்துக் கொள்கிறது.

அந்த மனத்திற்கு ஆதாரம் புத்தி. புத்திக்குள்ள அறிவுத் தன்மையைக் கொடுப்பது, எங்கும் நிறைந்துள்ள —வியாபகமாயுள்ள பரமாத்மா நம்முடைய உடலுக் குள்ளும், மனத்திற்குள்ளும், புத்திக்குள்ளும் இருக்கிறது. அந்த பரமாத்மாவின் ஒளியின் பிரதிபலிப்பினால் புத்திக்கு அறிவுச் சக்தி வளர்கிறது. புத்தி ஜடமானது; ஆனால் சுத்தமானது. அதில் எது பிரதிபலித்தாலும் அவைகளை ஏற்றுக்கொள்ளும் தன்மை வாய்ந்தது. ஆகவே பரமாத் மாவின் பிரகாசத்தின் பிரதிபலிப்பை புத்தி பெறுகிறதால், புத்தி அதன்படி செயல்படுகிறது.

இந்த உண்மை தெரியாததினால் புத்தியே 'நாம்' என்று தப்புக் கணக்குப் போட்டு—அதுவே ஜீவனும் என்று சொல்லிக்கொண்டு—இயற்கையாக அதுவே செயல்படு கிறது என்றும் கருதுகிறோம். நிஜமாக எங்கும் நிறைந் துள்ள பரமாத்மா உடலிற்குள் பிரகாசிக்கும் பொழுது, உடலின் நிமித்தமாய், அவனுக்கு ஜீவன் என்று பெயர் கொடுக்கிறோம்—அவனையே ஜீவாத்மா என்று அழைக் கிறோம். அவனே சுக—துக்கங்களையெல்லாம் அனுபவிப்ப தாக எண்ணுகிறோம். அவன்தான் எல்லா வேலைகளையும் செய்வதாகவும் எண்ணுகிறோம். இறந்த பிற்பாடு, மற்றொரு சரீரத்தைப் பிடித்துக்கொள்வதாகவும் இவனைத்

தான் எண்ணுகிறோம். இவையெல்லாம் அறியாமையினால் தோன்றக்கூடியதே. அறியாமையும் எங்கும் நிறைந்து இருக்கிறது. நம்முடைய உள்ளத்திலும் வந்து புகுந்து விடுகிறது.

ஆகவே எங்கும் நிறைந்துள்ள பரமாத்மாவோடுகூட, ஆனால் மனிதனும் மனிதனுடைய நிழலும்போல வேறாக இல்லாமல், விசாரித்துப் பார்க்கையில் வஸ்துவே இல்லாத ஒரு சக்தி இருந்து வருகிறதினால், பரமாத்மா சொரூபத்தின் உண்மைத் தன்மையை அறிந்துகொள்ள முடியாமல் போய் விடுகிறது.

ஒவ்வொரு மனிதனும் தூங்கும் பொழுது பரமாத்ம நிலையை அடைந்து வருகிறான்; அறியாமை கூடவே இருப்பதினால், அதை உணரும் சக்தி நமக்கு இல்லை. நன்றாகத் தூங்குகையில், எல்லா உறுப்புக்களும் அடங்கி—ஒடுங்கி—வேலை செய்யாமல் இருக்கின்றன. ஆன்மாவும் அந்தச் சமயத்திலும் ஒளியுடனும் ஆனந்தத்துடனும் இருக்கிறது. தூங்கி எழுந்தவுடன் அறியாமை இருப்பதினால்தான் நன்றாகத் தூங்கினேன்—ஆனந்தமாகத் தூங்கினேன்—ஆனால் அப்பொழுது எனக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்கிறோம். ஒன்றுமே தெரியாது என்பதினால்தான், அறியாமையும் இருக்கிறது என்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தெரிகிறது. ஆனந்தமாகத் தூங்கினேன் என்பதினால்தான், எல்லா உறுப்புக்களும் அடங்கி ஆனந்த நிலையில் ஆன்மா இருந்துவிடுகிறது என்றும் தெரிய வருகிறது. உதாரணமாக, ஒரு பெரிய நாடகக் கொட்டகை —அதில் அநேக தீபங்கள் ஒளி விடுகின்றன. அங்கே அநேக மனிதர்கள் நாடகம் பார்க்க வந்து கூடியிருக்கின்றனர். ஆனால் நாடகம் தொடங்கியவுடன், அதாவது சில நாடகங்களை நாம் பார்க்கும்பொழுது, விளக்கை மட்டும் அணைத்து விடுகிறார்கள். மின்விசிறி செயல்படுகிறது. மின்சாரமும் இருக்கிறது. ஆனால் நாடகம் நடிப்பவர்களின்

வேஷத்துக்கு ஏற்றவாறு ஒளி விளக்குகள் பிரகாசிக்கின்றன. நாடகம் நடந்த பிற்பாடு எல்லா விளக்குகளும் போடப்படும். ஆனால் மனிதர்கள் யாரும் இருக்கமாட்டார்கள், புறப்பட்டுப் போய்விடுவார்கள். நாடகம் ஆரம்பிக்கும் முன்னரும், நாடகம் விட்ட பின்னரும் எல்லா ஒளி விளக்குகளும் போடப்படும். ஆனால் நாடகம் பார்க்கும்பொழுது மட்டும் அந்த ஒளி விளக்குகள் இருக்காது.

இதே போல, மாயா சக்தியினால் இந்த உலகங்கள் அநேக விதமாகப் படைக்கப்பட்டு இருக்கின்றன. படைப்பிற்கு முன்னும் பரமாத்மா சொரூபம் மாத்திரமே இருக்கிறது. படைத்து— காத்து— சம்ஹரிக்கும் போதும், பரமாத்ம சக்தியினால் மாயாசக்தி காரியத்தில் செயல்படுகிறது. உலகம் படைக்கப்பட்ட பிறகு படைப்பிற்குக் காரணமான, மாயா சக்தியையும்—மாயா சக்திக்குக் காரணமான, பரமாத்மாவையும் எல்லோரும் மறந்துவிடுகிறார்கள். தாங்களாகவே படைக்கப்பட்டு காப்பாற்றப்படுவதாக எண்ணுகிறார்கள். அப்பொழுது அங்கே அறியாமை நிறைந்து இருக்கிறது. பரமாத்ம ஞானத்தின் நினைப்பே இருக்கிறதில்லை. ஆனால் அவ்வப்போது நமது சுக—துக்கங்களுக்கு ஏற்றவாறு, இறைவன் நினைப்பு மாத்திரம் வருகிறது; ஆன்மாவைப் பற்றிய நினைப்பே வருவதில்லை.

ஆன்மாதான் எங்கும் நிறைந்து விளங்குகிறது. ஆன்மாவிடம் உள்ள சக்தியானது, மாயா சக்தி எனப்படுகிறது. அந்த மாயா சக்தியின் துணைக்கொண்டு ஈஸ்வரன் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியவைகளைச் செய்கிறார். இந்த ஈஸ்வரனே அநேகமான உருவங்களையும் பெயர்களையும் காரியத்திற்கு ஏற்றவாறும் எடுத்துக்கொள்ளுகிறார். இந்த ஈசுவரன்தான் சகுண உருவங்களாக, கோவில்களில் வழிபடும் மூர்த்திகளாக விளங்குகிறார்.

இந்த சகுண உருவம்தான் ஒவ்வொரு யுகத்திலும்—ஒவ்வொரு விசேஷ காலத்திலும், அவதார வடிவம் எடுத்து-புராணங்களில் சொல்லப்படும் அநேக மூர்த்திகளாக விளங்குகிறது. அந்த சொரூபத்தைத்தான், ஜனங்கள் கோவில்களிலோ, வீடுகளிலோ வைத்து வழிபாடு செய்கிறார்கள். அந்த சொரூபத்தைத்தான், ஆத்ம ஞானம் அடைய விரும்புகிறவர்கள் மன ஒருமைப்பாட்டிற்காகத் தியானம் முதலியவைகள் செய்கிறார்கள்; பிறகு அந்தத் தியானத்திற்கிடையில், இந்த சொரூபம், தான் கரைந்து கொண்டு அவர்களுக்கு ஆன்ம ஜோதியைக் காட்டி வைக்கிறது. ஆகவே உலகம் முழுவதும் ஆன்ம ஜோதியினால் தான் இயங்கி வருகிறது.

ஆகவே இறைவழிபாடு என்பது ஆன்மாவின் உண்மைத் தத்துவத்தை அறிந்துகொள்வதற்குச் சாதனமான ஒரு வழி.

ஆன்மாவின் உண்மை நிலையை அதனிடமுள்ள மாயா சக்தி மறைத்துவிடுகிறது. மனிதனுடைய உண்மை நிலையை நிழல் மறைப்பதுபோல அந்த மாயா சக்தியை அகற்றுவதற்காக, சுத்த ஆத்ம தத்துவ ஞானத்தை நாம் பெறவேண்டும். அதற்காக அஞ்ஞான மயமான—அறியாமையான, மாயா சக்தியை அகற்ற வேண்டும். அதை அகற்ற இறைவனால் தான் முடியும். அதற்காக இறைவனை, வழிபட்டு அவன் அருளால் மாயா சக்தி விலகுவதற்காக முயற்சி செய்கிறோம்.

உதாரணமாக, உடம்பிலே அழுக்குப் போன்றவைகளோ—சூடு போன்றவைகளோ இருந்தால் அவைகளைப் போக்கிக்கொள்வதற்காக, எண்ணெய் முதலியவைகளைத் தேய்த்துக்கொள்கிறோம்; பிறகு அந்த எண்ணெயைப் போக்கடித்துக்கொள்வதற்காக, அரப்பு, சீயக்காய்த் தூள் போன்றவைகளைத் தேய்த்துக்கொள்கிறோம். ஒரு அழுக்கைப் போக்கடிப்பதற்கு மற்றொரு அழுக்குப் பொருளை உபயோகப் படுத்துகிறோம். நம்முடைய உடை அழுக்காய் இருக்கிற

தென்று, சலவையாளரிடம் போடுகிறோம். அவர்களோ (உவர் மண் முதலியவற்றால்) இன்னும் நன்றாய் அழுக்கு ஏற்றிப் பிற்பாடுதான் அதைச் சுத்தப்படுத்தி நம்மிடம் கொடுக்கிறார்கள். அதுபோல அறியாமையை அகற்றுவதற்கு அறியாமையினால் படைக்கப்பட்ட காரியங்களைச் செய்கிறோம்.

ஒரு வெளுப்புத் துணியில் சிங்கம், யானை போன்ற பொம்மைகள் வரையப்பட்டிருக்கின்றன. அதைக் குழந்தைகள் பார்க்கையில், அவை நிஜமான சிங்கம், யானை என்றே சொல்லும்; விஷயம் அறிந்தவன் துணியில் வரையப்பட்டிருக்கிறதே தவிர, நிஜமல்ல என்று தீர்மானித்துக்கொள்வான். இதுபோல், உலகம்—உலகிலுள்ள வஸ்து எல்லாவற்றையும், அஞ்ஞானிகளாகிய நாம் அறியாமையினால் நிஜமாகப் பார்ப்போம். ஞானிகளோவென்றால்—உண்மையான தத்துவத்தை அறிந்தவர்களோவென்றால், ஆதார வஸ்து ஒன்று மாத்திரமே அவர்கள் அனுபவத்தில் இருக்கும். மற்றவையெல்லாம், ஆபாசமான தோற்றமளிக்கும். நிஜமான தோற்றம் அளிக்காது.

ஆத்ம தத்துவம் அறிந்தவர்கள் செய்யும் காரியங்கள் அதாவது சாப்பிடுவது, தூங்குவது போன்ற காரியங்கள், நல்லது, கெட்டது போன்ற காரியங்கள் எல்லாம் நம்முடைய அறியாமை திருஷ்டிக்குத் தோன்றுமே தவிர, ஆத்மஞானிகளின் திருஷ்டியில்—பார்வையில்—செய்கையில், அவைகள் காரியங்களாகவே தென்படாது; அவர்கள் காரியங்களைச் செய்வதாகவே நினைப்பு இருக்காது. ஆன்மா அனுபவம் ஒன்றே அவர்கள் நினைவில் சதா குடிகொண்டிருக்கும். சரீர காரியங்கள் எல்லாம் சரீர தர்மத்துக்கேற்றவாறு நடைபெறுகிறது என்ற நினைப்புக்கூட இல்லாமல் சரீர காரியங்கள் நடைபெற்று வரும்.

உலகம்—உலகிலுள்ள பொருள்களைப்பற்றி வேதாந்தம் இரண்டு விதமாகக் கூறுகிறது. இந்த உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாமே உண்டு பண்ணப்பட

வில்லை. கனவில் நாம் பல கனவுகளைக் காண்பதுபோல் இந்த உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் அவ்வப் போது தோன்றுகிறது—நிஜமல்ல என்று ஒரு முறை. இதை ''ப்ராதி பாஸிக சத்யம்'' என்று சொல்வார்கள்.

உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் உண்டாகிறது—இருக்கிறது—அழிகிறது. இவையெல்லாம் நடைபெறுகிறது நிஜமே. ஆனால், ஆன்மா ஒன்றுதான் அழிவில்லாத பரம்பொருள்—உண்டாகாத பரம்பொருள்—ஆனந்த பரம்பொருள். இந்த ஆனந்த சொரூப பரமாத்மாவிடமிருந்துதான் மாயா சக்தியினால் உலகம்—உலகிலுள்ள பொருள்களெல்லாம் உண்டாக்கப்படுகின்றன. இந்த உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாமே மாறக்கூடியது, அழியக்கூடியது. துன்பத்தை அளிக்கக்கூடியது; ஆகவே இதிலிருந்து பரிபூர்ணமாய்—ஆனந்தமாய்—சைதன்ய சொரூபமாய்—அழிவே வராமல் இருக்கக்கூடிய பரமாத்மா ஒருவரைத்தான் நாம் அறிந்து கொள்ள வேண்டும். அந்த ஞானத்தினால் மாத்திரம் தான் நம்முடைய பிறப்பு—இறப்பு—துன்பம் முதலியவைகள் அகலும். உலகம்—உலகிலுள்ள பொருள்களெல்லாம், மாறிக்கொண்டிருந்தாலும்—அழிந்து கொண்டிருந்தாலும் ஏதோ ஒரு வடிவில் இருந்துகொண்டேதான் இருக்கும். நாம் தான் அதிலிருந்து விலகி இருக்க வேண்டும். ஆகவே, உலகம்—உலகிலுள்ள வஸ்துக்களெல்லாம் ''வ்யாவஹாரிக சத்ய''மாக ஏற்றுக்கொள்ளப்படும். உலகம் விவகாரங்களெல்லாம் நடைபெற்றே வரும் என மற்றொரு வகை.

இதையேதான் முதலில் சொன்ன கருத்தை அடிப்படையாகக் கொண்டு, த்ருஷ்டி—ஸ்ருஷ்டி—வாதம் என்பார்கள். இரண்டாவதை ஸ்ருஷ்டி—த்ருஷ்டி—வாதம் என்று சொல்லுவார்கள். அதாவது, கண்ணைத் திறந்தவுடன் உலகைப் பார்க்கிறோம். கண்ணை மூடினவுடன் ஒன்றும் தெரிவதில்லை. அதேபோல் நாம், உலகம்—உலகிலுள்ள

பொருள்கள் என்ற முறையில் பார்த்தால், எல்லாம் தெரி கிறது. நமது பார்வையினுல்—திருஷ்டியினுல்—இந்த உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் சிருஷ்டிக்கப்படுகிறது. ஆகவேதான் த்ருஷ்டி—ஸ்ருஷ்டி—வாதம் என்று கூறப் படுகிறது.

உலகம் எப்பொழுதும் இருக்கிறது. ஆனுல், அது நிஜமல்ல. ஒரு மரத்தினுல் யானை போன்ற பொம்மைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அந்த மரத்தில் யானையும் இருக் கிறது—மரத்தின் தன்மையும் இருக்கிறது. யானை என்ற எண்ணத்தில் பார்த்தால் மரம் தெரியாது—மரம் என்ற எண்ணத்தில் பார்த்தால் யானை தெரியாது. ஆகவே, மரம்—யானை இரண்டும் எப்பொழுதும் இருந்தாலும், நாம் பார்க்கும் பார்வையில்தான் மரமாகவோ—யானையாகவோ நமக்குத் தெரியும்; ஆனுல் மரத்தினுல் செய்யப்பட்ட யானை அது. ஆகவே, அதில் மரமும் இருக்கிறது—யானையும் இருக்கிறது. நிஜமானது—ஆதாரமானது மரம். அதில் உருவாக்கப்பட்டது யானை போன்ற பொம்மைகள். பொம்மைகள் உருவாக்கப்பட்டதென்னவோ நிஜமாய் இருந்தாலும், அந்த யானை நிஜமானதல்ல. மனித செய் கையின் உரு தோற்றம். எதுவரையில் மரம் இருக்கிறதோ அதுவரையில் மரத்தால் செய்யப்பட்ட யானையும் இருக்கும். இரண்டையும் பிரிக்க முடியாது. ஆனுல், நமது புத்தி யினுல் பிரித்துத் தெரிந்துகொள்ள முடியும். அதுபோல ஆன்மா—இறைவன்— உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாமே ஒன்ருேடொன்று மாயா சக்தியினுல் பிணைக்கப் பட்டிருக்கிறது.

இவைகளில் ஆன்மா ஒன்றுதான் அழிவில்லாதது—ஆனந்தமானது, பாக்கியெல்லாம் அழியக்கூடியது—மாறக் கூடியது என்று விவேகத்தினுல்—பகுத்தறிவினுல், ஆலோ சித்து—ஓர் தீர்மானத்திற்கு வரவேண்டும். ஆகவே, இரண் டாவது முறையில் உலகம்—உலகிலுள்ள பொருள்களைல்

லாம் ''சிருஷ்டிக்க''ப்பட்டிருக்கின்றன. ஆனால், நாம் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களைப் பார்க்கும் முறையில்தான் வித்யாசம். அதனால் ஸ்ருஷ்ட—த்ருஷ்ட—வாதம் என்று சொல்லப்படுகிறது.

இந்த உலகில், இந்த உலகம் படைக்கப்படுவதற்கு முன்பே ஆறு வஸ்துக்கள் இருக்கின்றன. இவைகளை வைத்துக் கொண்டுதான் உலகமே படைக்கப்படுகிறது. அதாவது, ஜீ வ ன்—ஈஸ்வரன்—பரமாத்மா—ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள வேற்றுமை—அவித்தை (அறியாமை —மாயை — அஞ்ஞானம்)—பரமாத்மாவுக்கும்—மாயைக்கும் உள்ள தொடர்பு ஆக ஆறு வஸ்துக்கள்.

பரமாத்மாவிற்கும் மாயைக்கும் உள்ள தொடர்பினால், ஈஸ்வரனானவர் ஜீவர்களின் கர்மாக்களை அநுசரித்து, மாயையினால் இந்த உலகம் முழுவதையும் சிருஷ்டிக்கிறார். இந்த ஆறு வஸ்துக்களும் ஒருவரால் உண்டுபண்ணப் படாமல் அநாதியாய் உள்ளவை.

இந்த உலகம் படைப்பதற்கு முன்பு, இப்பொழுது காணக்கூடிய எல்லா வஸ்துக்களும் ஸ்தூல வடிவில் இல்லாமல், சூக்ஷ்ம வடிவத்தில் இருந்து வந்தன. மண்ணால் செய்யப்பட்ட, மரத்தினால் செய்யப்பட்ட பலவித சாமான்களும் சூக்ஷ்ம வடிவத்தில் மண்ணிலும் மரத்திலும் இருந்திருக்கிறது; அதைத்தான் குயவர்கள்—தச்சர்கள் முதலியவர்கள் அவர்கள் செய்யும் பணியின் மூலம் வெளிப்படுத்துகிறார்கள். சிருஷ்டிக்கு முன்பு, இம்பொழுது காணக்கூடிய பொருள்களெல்லாம் ''அவ்யக்த'' வடிவத்தில், அதாவது தெளிவாகப் புரிந்துகொள்ள முடியாத ஒரு நிலையில் இருந்திருக்கிறது. சிருஷ்டிக்குப் பின்பு, ''வ்யக்த'' மாகிறது. அதாவது, தெளிவாகப் புரிந்துகொள்ளும் நிலையை அடைகிறது.

உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் ஈஸ்வரனால் மாயையின் சக்திகொண்டு சிருஷ்டிக்கப்படுகிறது. மாயையினால் சிருஷ்டிக்கப்படுவதால் உலகம்—உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் ஜடமாக இருக்கிறது.

ஈஸ்வரன் சம்பந்தத்தினால் படைக்கப்பட்ட பொருள்களில் ''அஸ்தித்துவம்'' அதாவது பொருள் இருக்கிறது என்ற எண்ணமும்—நமக்கு இது தேவை என்ற விருப்பமும்—இதை நாம் அடையவேண்டும் என்ற முயற்சியும்—இதை அடைந்தால் நமக்கு ஆனந்தம் கிடைக்கும் என்ற எண்ணமும் ஏற்படுகிறது. பரமாத்மா சொரூபமானது ஒன்றுதான், எப்பொழுதும் அஸ்தித்துவத்துடன் கூடியது. அதாவது பரமாத்மா ஒன்றுதான் இருக்கிறது என்ற சொல்லுக்குப் பொருளாக விளங்குகிறது. பாக்கிப் பொருள்களெல்லாம் மாறும்—அழியும். அதேபோல் பரமாத்மா ஒன்றுதான் ஆனந்தமானது. ஆகவே எல்லோரும் ஆனந்தத்தையே விரும்பிகிறார்கள். ஆதலால், அந்த ஆனந்தத்தின் பிரதிபலிப்பு, எல்லாப் பொருள்களிலும் பிரதிபலிக்கிறது. ஆகவேதான் எல்லாப் பொருள்களையும் ஜனங்கள் விரும்புகிறார்கள்.

ஒவ்வொரு பொருளிலும் மாயா சம்பந்தத்தினால், ஜடத் தன்மையும்—பரமாத்ம சம்பந்தத்தினால், அந்தப் பொருளை அடைய வேண்டும் என்ற விருப்பமும்—முயற்சியும் ஏற்படுகிறது. ஒவ்வொரு பொருளிலும் ஐந்து தன்மைகள் இருக்கின்றன. அதாவது அஸ்தி (இருக்கும் தன்மைகள்)—பாதி (பிரகாசிக்கும் தன்மை)—பிரியம் (தனக்கு வேண்டும் என்ற ஆசை)—பெயர் (நாமா)—ரூபம் (ஆக்ருதி—வடிவம்) என ஐந்து.

அதில், முதல் மூன்றும் பரமாத்மாவின் சம்பந்தத்தினால் இருக்கின்றன. பின் இரண்டும் மாயா சம்பந்தத்தினால் இருக்கின்றன. முதல் மூன்றும் அழியாதது. பின் இரண்டும்

அழியக்கூடியது. அனுதியாய் முன்சொன்ன பிரகாரம் ஆறு வஸ்துக்கள் இருந்தாலும், பரமாத்மா ஒன்றைத் தவிர, மற்ற ஐந்திற்கும் ஆரம்பம் இல்லாமல் இருந்தாலும் முடிவு உண்டு. பரமாதமாவோடு ஜீவர்த்மா இரண்டறக் கலந்து விடும்—பாக்கி, மாயை - மாயைக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு-ஈஸ்வரன் - ஈஸ்வரனுக்கும் ஜீவனுக்கும் உள்ள வேற்றுமை இவையெல்லாம் போய்விடும். உண்மை ஞானத்தினுல், இவையெல்லாம அனுதியாய் இருந்தாலும், முடிவு உண்டு என்ற அறிவு ஏற்பட்டுவிடும்.

இந்த உலகிலுள்ள பொருள்கள், ஸ்தூலம்—சூக்ஷ்மம்—காரணம் என மூன்று வடிவங்களில் உள்ளன. முதலில் காரண வடிவத்திலிருந்து சூக்ஷ்ம வடிவத்தைப் பெற்று, சூக்ஷ்ம வடிவத்திலிருந்து ஸ்தூல வடிவைப் பெறுகிறது உலகம், உலகிலுள்ள பொருள்களெல்லாமே. உலகம்—உலகிலுள்ள பொருள்களெல்லாமே, பஞ்சபூத சேர்க்கையுடன் கூடியது. பஞ்ச பூதங்கள் சூக்ஷ்ம வடிவத்தில் உள்ளது. அதாவது இவைகள் கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆனுல் அதனுடைய காரியங்களெல்லாம் ஸ்தூல வடிவத்தில் இருக்கின்றன—கண்ணுக்கும் தெரிகின்றன.

உதாரணமாக, ப்ருதிவி (மண் முதலிய கண்ணுக்குக் காணக்கூடிய எல்லாப் பொருள்களும்)—அப்பு (ஜலம், தண்ணீர்)—தேஜஸ் (தேஜஸ் என்பதில் நெருப்பு—ஒளி எல்லாமும் சேர்ந்தது)—வாயு (கர்ற்று)—ஆகாசம் (இடைவெளி). இவைகளில் ஆகாயம் நம் கண்ணுக்குத் தெரிவு தில்லை. ஆனுல் இடைவெளி இருக்கிறது தெரிகிறது. அந்த இடைவெளியைத்தான், ஆகாசம் என்று சொல்கிறோம். ஆகாசத்தின் குணம் சப்தத்தை ஏற்று—வாங்கி, வெளியிடுவது. ஆகவேதான் சப்தம் செய்வதற்கு இடைவெளியின் தொடர்பு தேவைப்படுகிறது. உதாரணமாக, இரண்டு கைகள் தனியாக இருக்கும்பொழுது, அந்த இரண்டு கைகளுக்கும் மத்தியில் ஆகாசம் இருக்கிறது-அதாவது

இடைவெளி இருக்கிறது; ஆனால் அப்பொழுது ஆகாசத்தின் குணம்-ஆகாசத்தின் விசேஷத்தன்மை இவைகள் நமக்குத் தென்படவில்லை. இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டினால், அப்பொழுது சப்தம் பிறக்கிறது. அப்பொழுது இரண்டு கைகளுக்கும் மத்தியிலுள்ள இடைவெளி இல்லாமல் போய்விடுகிறது. இரண்டு கைகளின் உரசலினால்தான் சப்தம் உண்டாகிறது.

அதேபோல் ஒரு பெரிய டமாரம் இருக்கிறது. அதற்கு சப்தம் ஒலிக்கும் தன்மை உண்டு. ஆனால் அதைக் கையாலோ அல்லது கழியினாலோ அடித்தால்தான், அதிலிருந்து சப்தம் எழும்பும். அதாவது ஆகாசத்தின்- இரண்டு பொருள்களுக்கும் மத்தியில் இடைவெளியின் தொடர்போடுகூட ஒரு செய்கை-காரியம் செய்தால்தான் சப்தம் பிறக்கிறது. ஆகாசம் இருப்பது தெரிவதில்லை. ஆனால் இடைவெளி இருக்கிறது தெரிகிறது.

ஆகாசத்தின் விசேஷத் தன்மையான சப்தமானது, கண்ணுக்குத் தெரிவதில்லை-காதுக்கு மாத்திரமே கேட்கிறது. அதுபோல காற்று, அந்தக் காற்றும் கண்ணுக்குத் தென்படுவதில்லை; ஆனால் நம்மீது உஷ்ணமான காற்றோ-குளிர்ச்சியான காற்றோ அடிக்கும்பொழுது, காற்று இருக்கிறது என்பதை உணர்கிறோம். அந்த உணர்ச்சி உடலில் தான் ஏற்படுகிறது. ஆகவே காற்றிற்கு விசேஷத்தன்மை ஸ்பரிசம்- பரிச உணர்வு ஏற்படுத்துதல், அந்த உணர்வு உடலின் மூலமாகத்தான் தெரிய வருகிறது. அதன் மூலமாக, வாயுவை - காற்றை, அறிந்து கொள்கிறோம். அதாவது காற்று இருக்கிறது என்பதை ஸ்திரப்படுத்திக் கொள்கிறோம்.

வாயுவின் குணம் - வாயுவின் விசேஷத்தன்மை ஸ்பரிசம். காற்றிலும் சப்தம் அதாவது புயல் போன்ற பெருங்காற்று அடிக்கும் சமயம், மரங்களின்-கிளைகளின் உரசலின் மூலம் சலசலப்புச் சப்தம் ஏற்படுகிறது. ஆகவே

ஆகாசத்தின் இடைவெளியில் காற்று வருவதினால், ஆகாசத்தின் விசேஷத்தன்மையான சப்தமும் காற்றோடு கலந்து சேர்ந்து வருகிறது.

மூன்றாவதாக தேஜஸ் (நெருப்பு - ஒளி முதலியவை களெல்லாம்) இவைகள் கண்ணுக்குத் தெரிகின்றன. இதன் விசேஷத்தன்மை ரூபம், சூடு - உஷ்ணத் தன்மையும், ஸ்பரிச உணர்ச்சியினால் தெரிந்து கொள்ளப்படுகிறது தேஜஸ் கண்ணுக்குத் தெரிகிறது - உஷ்ண ஸ்பரிசமானது ஸ்பரிச உணர்ச்சியினால் தெரியவருகிறது. தேஜஸுக்கும், ஆகாசத்தின் விசேஷத் தன்மை ஒலிகள் - வாயுவின் விசேஷத் தன்மையான காற்றின் வேகம் - இவையெல்லாமும் இருக் கிறது. வேகமாகக் காற்று அடிக்கும் சமயம், அக்னி ஜ்வாலை முதலியவையெல்லாம் சுற்றுகிறது. அதனால் காற்றின் தன்மை புலப்படுகிறது. அப்பொழுது படபட என்ற ஒரு சப்தமும் நெருப்பிலிருந்து உண்டாகிறது. ஆகவே ஆகாசத்தின் விசேஷத் தன்மையான குணமும் இருக்கிறது தெரிகிறது. ஆகவே தேஜஸ் - தேஜஸின் விசேஷத் தன்மை யான ரூபம் - காற்று - காற்றின் - விசேஷத் தன்மையான பரிசம் - ஆகாசம் - ஆகாசத்தின் விசேஷத் தன்மையான சப்தமும், இந்த மூன்றும் இருக்கின்றன.

நான்காவதாக ஜலம் - ஜலம் கண்ணுக்குத் தெரிகிறது. அதிலுள்ள மதுரம் (இனிப்பு - தித்திக்கும் சுபாவம்) கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆனால், நாக்கினால் உணர் கிறோம். ஜலம் கண்ணுக்குத் தெரிகிறது. அதனுடைய விசேஷத் தன்மையான தித்திக்கும் சுபாவம் நாக்கினால் தான் உணரமுடியும். தேஜஸ் - வாயு - ஆகாசத்தின் குணங்களும் ஜலத்தில் இருக்கின்றன. வெண்மையும் ஜலத்தைத் தொட் டால் குளிர்ச்சியான உணர்ச்சியும் - அதே ஜலம் அருவியி லிருந்து கீழே இறங்கும்பொழுது "சோ" என்ற சப்தமும். இவை மூன்றும் - தேஜஸின் - வாயுவின் - ஆகாசத்தின் குணமாக ஜலத்திலிருந்து உண்டாகிறது. ஸ்பரிசம் என்பது

தேஜஸிலும் - வாயுவிலும் இருக்கக்கூடிய ஒரு விசேஷத் தன்மையான குணம். வாயுவில் மத்யதரமான ஸ்பரிசம் (அனுஷ்ணஸ்தீத ஸ்பரிசம்)...தேஜஸின் விசேஷ குணம். உஷ்ண ஸ்பரிசம்:- நெருப்பின் குணம் சூடாக இருப்பதினால், ஸ்பரிசம் சூடாக இருக்கிறது. ஸ்பரிசம் என்ற விசேஷத் தன்மையானது, தேஜஸுக்கு வாயுவிலிருந்து வந்தது. தேஜஸின் சுபாவம் உஷ்ணமானதினால், அந்த ஸ்பரிசமானது உஷ்ண ஸ்பரிசமாக அமைகிறது. ஜலத்தின் தன்மை சீதளமானதினால்—குளிர்ச்சியானதினால், சீதள ஸ்பரிசமாக ஜலத்தில் ஏற்படுகிறது. ஆகவே, ஸ்பரிச குணம் ஜலம்—தேஜஸ்—வாயு ஆக மூன்றிலும் தொடர்ந்து இருக்கிறது. ஆகாசம்—வாயு இரண்டிற்கும் ரூபம் இல்லாததினால்—கலர் இல்லாததினால் கண்ணுக்குத் தெரிகிறதில்லை. தேஜஸுக்கு பாஸ்கர சுக்லம்—பிரகாசிக்கிற வெளுப்பு ரூபம் இருக்கிறது. ஜலத்திலும் அபாஸ்கர சுக்லம்—பிரகாசிக்காத வெளுப்பு ரூபம் இருக்கிறது; கண்ணுக்குத் தெரிகிறது.

ஐந்தாவதாக, ப்ருதிவியில் (மண் முதல் மரம் வரை, கண்ணுக்குத் தெரியக்கூடிய எல்லா அசை பொருள்களிலும் —அசையாப் பொருள்களிலும்) ஜலத்தின் விசேஷத் தன்மையான—சுவையும் தேஜஸின் விசேஷத் தன்மையான ரூபமும்—வாயுவின் விசேஷத் தன்மையான ஸ்பரிசமும்—ஆகாசத்தின் விசேஷத் தன்மையான சப்தமும் இருக்கிறது. ப்ருதிவியின் விசேஷத் தன்மையான வாசனையும் இருக்கிறது. ப்ருதிவியிலுள்ள எல்லாப் பொருள்களும் கண்ணுக்குத் தென்படுகின்றன. அவைகள் எல்லாவற்றிற்கும் எல்லாவித ரூபங்களும் இருக்கின்றன.

ரூபங்கள் மொத்தம் ஏழு. அதாவது வெளுப்பு, கறுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை, காராம் பசுவின் நிறம், இரண்டு மூன்று கலரோடு கூடிய ஒரு வர்ணக் கலவை. இந்த ஏழு ரூபங்களும் ப்ருதிவியில் இருக்கின்றன. ப்ருதிவி

பொருள்களெல்லாம் கண்ணுக்குத் தெரிய வரும். அந்த ப்ருதிவியின் விசேஷத் தன்மையான வாசனை—ஸ்பரிசம் - ரூபம் - சப்தம் - சுவை - இவைகளெல்லாம் ஒவ்வொரு இந்திரியங்களின் மூலம் நாம் அறிந்துகொள்கிறோம். ஆகவே, ஆகாசத்தின் மூலம் சிருஷ்டி துடங்கப்பட்டு, ஆகாசம் - அதிலிருந்து வாயு, அதிலிருந்து தேஜஸ், அதிலிருந்து ஜலம், ஜலத்திலிருந்து ப்ருதிவி - இந்த விதமாக சிருஷ்டிக்கப்படுகிறது.

இந்தப் பஞ்சபூதங்களும் புதிதாகச் சிருஷ்டிக்கப்படவில்லை; காரண வடிவத்தில் - சூக்ஷ்ம வடிவத்தில், சிருஷ்டிக்கு முன்பு அவ்யக்த வடிவில்-அதாவது, நன்றாகத் தெரியும் நிலையில் இல்லாமல் இருந்தது. பிறகு வ்யக்தமாக -கண்ணுக்குத் தெரிந்த நிலையில் படைக்கப்பட்டது. உலகம் படைக்கும் பொழுதே, தற்போது உலகில் எத்தனை வகையான பிராணிகளையும்—பொருள்களையும்—உலகங்களையும்—உலகிலுள்ள பொருள்களையும் புராணங்கள் மூலமாகப் படித்துத் தெரிந்துகொண்டு, நேராகவும் அறிந்து கொண்டு இருக்கிறோமோ இவை அத்தனையுமே முதல் முதலிலேயே சிருஷ்டிக்கப்பட்டன. ஆனால் அப்பொழுதே இவைகளில் சில பொருள்கள் குறைவாகவும்—சில பொருள்கள் அதிகமாகவும் இருக்கலாம். இப்பொழுது அவற்றுள் சில பொருள்கள் அதிகமாகவும்—சில பொருள்கள் குறைவாகவும் இருக்கலாம்.

முன்னர் மரங்கள்—பிராணிகள் முதலியவைகளெல்லாம் அதிகமாய் இருக்கலாம். மனிதர்கள் குறைந்து இருந்திருக்கலாம்—தற்போது மரங்களையெல்லாம் அழித்து விட்டு—பிராணிகளையெல்லாம் கொன்று குவித்துவிட்டு, மனிதர்கள் அதிகமாக இருக்கலாம். அது யுக தர்மத்துக் கேற்றவாறும்—கர்மத்துக்கேற்றவாறும் நடைபெறும் செயல். அதாவது பிராணிகளின் செயல்களை அனுசரித்து வரும் பலன்.

இந்தப் பஞ்ச பூதங்களும், தனித்தனியாக இருக்கும் பொழுது ஒரு காரியமும் செய்ய உதவாது. ஒவ்வொரு பூதத்திலும் பாதி பாகம் அந்தந்த பூதமும் மற்ெெரு பாதி நான்கு பூதங்களின் பாகங்களுமாக சேர்க்கப்படுகிறது. ஆகவே ஒவ்வொரு பூதத்திலும், அதன் தன்மை பாதி பாகம், மற்ற நான்கு பூதங்களின் தன்மைகள் சேர்ந்து மற்ற பாதி பாகம் இருக்கிறது.

உதாரணமாக பஞ்ச பூதங்களிலே ஆகாயத்தின் அரை பாகம் மாத்திரமே ஆகாயத்தில் இருக்கிறது. மற்றுமுள்ள அரை பாகம் மற்ற நான்கு பூதங்களும் சேர்ந்து இருக்கின்றன. அப்பொழுதுதான் ஒவ்வொரு பூதமும் ''வ்யக்த'' வடிவத்தில் அதாவது புலனுக்குத் தெரியும் உருவில் அமைகிறது. முன்பு சொன்ன ஆறு அனுதி வஸ்துக்களிலுள்ள ஈஸ்வரன்-(உலகிலுள்ள எல்லா ஜீவன்களுக்கும் அபிமான தேவதையான) இரண்யகர்ப்பன் சிருஷ்டித்தார். அவர் மூலமாக, உலகம்—உலகிலுள்ள பொருள்களெல்லாம் படைக்கப்படுகின்றன. எல்லா ஜீவராசிகளுக்கும் அதிபதியாக இருக்கும்பொழுது—அபிமான தேவதையாக இருக்கும் பொழுது இரண்யகர்ப்பன் என்று பெயர். அவரே உலகமெல்லாம் படைக்கும் சக்தியாக—உருவமாக வடிவெடுக்கும் பொழுது, அவருக்கு பிரம்மா என்று பெயர்.

இரண்யகர்ப்பம் என்ற சொல்லுக்கு, தங்கமயமான கருவறை என்று பொருள். அதாவது எல்லா ஜீவராசிகளையும் பிரளய காலத்தில் ஜோதி வடிவமாக உள்ள இறைவனிடத்தில் வயப்படுத்தி இருப்பதால், அந்த ஜோதி உருவமும் தங்கத்தின் உருவமும் ஒரு வடிவமாக இருப்பதினுல், இரண்யகர்ப்பம் என்ற பெயர் உண்டாகிறது. பிறகு அவரிடமிருந்து உலகம்—உலகிலுள்ள பொருள்களெல்லாம் உண்டாவதினுல், கர்ப்பம் என்ற சொல்லும் பொருத்தமாகிறது.

பிரம்மா என்ற சொல்லிற்கு வேதத்தின் தத்துவங்களை மனதில் ஏற்றி - அனுபவித்து அதே பிரகாரம் சிருஷ்டிகளைச் செய்யும் சக்தி படைத்தவர் எனலாம். இயற்கையாக தோன்றின பிரகாரமெல்லாம் சிருஷ்டி செய்யாமல், முன்பு மஹா பிரளயத்திற்குப் பிறகு எவ்விதம் உலகம் - உலகிலுள்ள பொருள்கள் சிருஷ்டிக்கப்பட்டதோ அதே மாதிரியாகவே இப்பொழுதும் வேதத்தின் தத்துவங்களின் சகாயத்தின் மூலமாக பிரம்மாவானவர் உலகைப் படைக்கிறார்.

ஒரு வருஷத்துக்கு ஆறு ருதுக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ருது காலத்திற்கு ஏற்றவாறு, ஒவ்வொரு காரியங்கள் நடைபெறுகின்றன. வசந்த ருதுவில், புஷ்பங்களும் - மாங்கனிகளும் உண்டாகின்றன. வருஷ ருதுவில், மழை உண்டாகிறது. இவ்விதமாக ஒவ்வொரு காரியமும் ஒவ்வொரு ருதுவில் ஒவ்வொரு ஆண்டும் ஒரே மாதிரியாகவே வருகின்றன. அதுபோல் ஒவ்வொரு சிருஷ்டி காலத்திலும் சிருஷ்டிக்கப்படும் வஸ்துக்களெல்லாம், ஒரே மாதிரியாகவே சிருஷ்டிக்கப்படுகின்றன. புதிதாக, தோன்றிய பிரகாரம் சிருஷ்டியென்பது கிடையாது.

ஒரு மரப்பலகையில் நாற்காலி செய்கிறோம். மண்ணில் பானை செய்கிறோம. பாலில் தயிர் உருவாகிறது. இதிலிருந்து பாலின் சக்தி தயிரிலும்-குடம் பண்ணும் சக்தி மண்ணிலும் -நாற்காலி செய்யும் சக்தி மரத்திலும் இருக்கிறது என்று தெரிந்துகொள்கிறோம். அப்படி இல்லாவிட்டால், மண்ணிலிருந்து நாற்காலியும் - மரத்திலிருந்து குடமும் பண்ணும் சக்தி இருக்க வேண்டும்; அது ஒருகாலும் இருக்காது. இருப்பதில்லை. ஆகவே காரியத்தின் சக்தி காரணத்தில், அவ்யக்தமாக - வெளிப்படையாகத் தெரியாமல் இருக்கத்தான் இருக்கும்.

நாற்காலி என்ருலேர் - குடம் என்ருலோ, அவை எந்தக் காலத்திலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்; காலத்தை அனுசரித்து, மேல் அலங்காரம் வேணுமென்ருல் சிறிது மாறலாம். இருந்தும் குடத்தின் உருவமும், நாற் காலியின் உருவமும் மாத்திரம் மாருது. அதுபோல உலகம் ஒவ்வொரு சிருஷ்டி காலத்திலும், முன் சிருஷ்டி காலத்தில் எப்படி சிருஷ்டிக்கப்பட்டதோ அதே மாதிரித்தான் சிருஷ் டிக்கப்படும். ஆகவே படைக்கப்பட்ட சமயத்திலேயே - சிருஷ்டிக்கப்பட்ட சமயத்திலேயே, தற்போது காணப்படும் எல்லா வஸ்துக்களும் படைக்கப்பட்டே இருந்தன. நாளடைவில் சில வஸ்துக்கள் பெருகியும் - சில வஸ்துக்கள் குறைந்தும் போய்விடுகிறது.

உலக வரலாற்றின் சரித்திரங்களை எழுதியுள்ள பிரிட்டிஷ் சரித்திர ஆசிரியர்கள் எல்லோரும் கிருஸ்து வர்களே. அந்த சரித்திர ஆசிரியர்கள் சொல்கிற பிரகாரம், ஓரறிவிலிருந்து படைக்கப்பட்டு—பிறகு ஓரறிவு ஈரறி வாக—ஈரறிவு மூன்று அறிவு பெற்று—மூன்றறிவு நான்கறிவு பெற்று—நான்கறிவு ஐயறிவைப் பெற்றுக் கடைசியாக ஆறறிவு பெற்ற மனிதப் பிறவியாகப் பிறக்கப்படுகிறது என்று கூறுகிருர்கள். ஏனென்ருல் இந்த முறையை இந்து சமயம் ஏற்றுக்கொள்வதில்லை. ஏனென்ருல் மனிதனைத் தவிர மற்ற எந்தப் பிராணிகள் எந்த நல்ல கெட்ட காரியம் செய்தாலும் அவைகளுக்குப் பலன் கிடையாது. ஏனென்ருல் அவைகள் விசேஷ பகுத்தறிவு சக்தியுடன் செய்யாமை யால் பிராணிகளுக்கு வரும் சுக—துக்கங்கள் எல்லாம் முன்பு மனிதப் பிறவி எடுத்தபோது செய்த நல்வினை தீவினைகளின் பலனுகும். அதையொட்டி இப்பொழுது ஜன்மா, சுக—துக்கங்கள் அவைகளுக்கு ஏற்படுகின்றன. ஆகவே எல்லாப் பிறவிகளுக்கும் மூலகாரணமாகும். மனிதப் பிறவி, அந்த மனிதப் பிறவியில் செய்யும் நல்வினை—தீவினைகள் இவைகளைச் செய்விக்கும் ஜீவன்.

முன்சொன்ன பிரகாரம் ஆறு வஸ்துக்களில் ஒன்ருன ஜீவன், ஒரு காலத்தில் - ஒருவராலும் உண்டுபண்ணப் படாமல், அநாதியாக இருந்து வருகிருன். ஆகவே மற்ற சரித்திர வரலாற்று ஆசிரியர்கள் சொல்லுவதுபோல், உலகம் தோன்றி சில ஆயிர வருஷங்கள் ஆகிவிட்டது என்று சொல்வதுபோல், நமது சித்தாந்தத்தில் சொல்வதில்லை; அநாதி சிருஷ்டியென்று கூறுகிருர்கள். அவ்யக்தமாக இருந்து வ்யக்தமாக இருக்கிறது. இது இரண்டுதான் பேதம். அதாவது சிருஷ்டிக்கு முன்பு, தெளிவாகப் புலப்படும் நிலையில் இல்லாமலிருந்து, அதுவே சிருஷ்டிக்குப் பின்பு தெளிவாகப் புலப்படும் நிலையில் இருக்கிறது என்பதுதான் வேற்றுமை. ஆகவே நமது சித்தாந்தப் பிரகாரம், இல்லாத ஒன்றைப் புதிதாக சிருஷ்டிப்பதில்லை. இருப்பதேதான் திரும்பத் திரும்ப சிருஷ்டிக்கவும் படுகிறது. ஆகவே நமது இந்த சித்தாந்தத்திற்கு "ஸத்காரியவாத சித்தாந்தம்" என்று பெயர்.

ஸத்காரியவாத சித்தாந்தமாக இருந்தாலும் பரமாத்மா ஒன்று தவிர, பாக்கி எல்லாம் ஞானம் வந்த பிறகு, மறைந்தோ—அழிந்தோ விடும். அதாவது ஒவ்வொரு உடலுக்குள்ளும் இருக்கும் ஆன்மாவின் உண்மை சொரூபம் அறிந்து கொண்டு விட்டால், அப்பொழுது அப்படி அறிந்து கொண்டவனுக்கு, உலகம்—உலகிலுள்ள பொருள்கள்—இந்த சரீரம்—இந்திரியங்கள் எல்லாம் நிஜமானதல்ல, கர்மத்தினுல் வந்தது என்பது விளங்கும். இந்தக் கர்மத்திற்குக் காரணம், நம்முடைய ஆசைகளே—ஆசைக்குக் காரணம், ஒவ்வொரு பொருளின் உண்மைத் தத்துவம் அறிந்து கொள்ளாமல் இருப்பதே இதற்குக் காரணம். ஒரு பொருளைப் பார்த்தவுடன் எனக்கு அது வேண்டும் என்ற ஒரு மோகம் ஏற்படுவதே மோகத்திற்குக் காரணம். இரண்டாவது வஸ்து தென்படுவதே—இரண்டாவது வஸ்து

தென்படுவதற்குக் காரணம், நம்மிடமுள்ள அறியாமையே—அதாவது உடலோடு நிழல் இருக்கிறது. அந்த நிழலையே மனிதனுக நாம் நினைத்துக் கொள்வது போல்.

ஒரு பெரிய நிலைக் கண்ணுடியின் முன் நின்றுகொண்டு, நாம் நமது உடலுக்கு அலங்காரம் செய்து கொள்கிறோம். கண்ணுடியில் நமது உருவம் நன்ருக இல்லாவிட்டால், நமது உடல் நன்ருக இல்லையென்று எண்ணி மேலும் நம்மை அலங்கரித்துக் கொள்கிறோம். ஆகவே உண்மை வேறு — பிரதிபிம்பம் - நிழல் வேருகத் தோன்றினுலும் நிழலும்-பிரதிபிம்பமும் உடலை விட்டுத் தனியாக இருப்ப தில்லை. ஒன்ருன நிழலுடனும் - பிம்பத்துடனும் கூடிய சரீரத்தை இரண்டாக நாம் நினைக்கிறோம். இரண்டாக நினைப்பது நிஜமான வஸ்துவல்ல. கண்ணுடியினுல் - வெளிச்சத்தினுல் ஏற்பட்ட தோற்றமே நிழலும் - பிரதி பிம்பமும். ஆகவே நம்முடைய அறியாமையினுல் துவைதம் பிறக்கிறது. இரண்டு என்ற எண்ணம் முளைக்கிறது. இது இன்று அன்று தோன்றவில்லை. பரமாத்மா அனுதியாய் இருப்பதினுல் - அதை ஆஸ்ரயித்துள்ள நிழல் போன்ற மாயையும் அனுதியாக இருந்து வருவதால், துவைத ஞானமும் இரண்டு என்ற எண்ணமும் அனுதியாய் இருந்து வருகிறது; அனுதியாய் இருந்தாலும் அவைகளுக்கு முடிவு உண்டு. அனுதியாய் உள்ள ஆன்மா ஒன்றுதான் முடிவில்லாதது.

பொதுவாக நம்முடைய வாழ்க்கை அனுபவத்தில், சிறிய சிறிய ப்ரமங்களை, அதாவது (ஒன்றை மற்றொன்ருக பார்க்கும் நிலைகளை) கயிற்றில்—பாம்பு, கிளிஞ்சலில் - வெள்ளி, கானலில் நீர் போன்றவைகளைப் பார்க்கிறோம். பிறகு அவையெல்லாம் பொய்யென்றும், எதில் அவ்வாறு தோன்றிற்றோ அந்த ஆதாரம் மாத்திரமே நிஜமென்றும் அனுபவிக்கிறோம். ஆனுல் இந்த உலகம் - உலகத்தின்

தோற்றம் - இந்த ப்ரமம் மாத்திரம் - இந்தத் தோற்றம் மாத்திரம் சிறிதாகவோ - சிறிது காலமாகவோ அல்ல. இது அனுதிப்ரமம் - அனுதி தோற்றம்.

பொதுவாக ஒன்று மற்றொன்ருகத் தெரிவதென்றால், அந்தப் பொருள்களின் அறிவும் நமக்கு முன்பு இருந்திருக்க-வேண்டும். கயிற்றையும், பாம்பையும் தனித்தனியாகக் கண்டிருக்கிறோம். கிளிஞ்சலையும், வெள்ளியையும், தனித்-தனியாகக் கண்டிருக்கிறோம். தனித்தனியாகக் கண்ட-வைகளை, ஒரே வஸ்துவில்-ஒரே பொருளில் அறியாமையினால் கற்பிக்கிறோம். இந்த அறியாமைக்குக் காரணம், கயிற்றில் பாம்பைக் கண்டதற்கு இருட்டுக் காரணமாகிறது. கிளிஞ்சலில் வெள்ளி தோன்றியதற்கு வெள்ளியின் மீதுள்ள ஆசை முதலியவை காரணமாக அமைகின்றன. அதுபோல் உலகம், உலகிலுள்ள பொருள்களெல்லாம் தோன்றுவதற்குக் காரணம், இரண்டு பொருள்களை தனித்-தனியாகத் தெரிந்துகொண்ட அறிவோ, இருட்டோ, ஆசையோ காரணமல்ல, அறியாமையே—அவித்தையே—மாயையே காரணமாக அமைகிறது.

அறிவு என்பது உண்மை அறிவு—தோற்றத்தின் பிரமை (பொய்யறிவு) என்று இரு வகைப்படும். பொய்-யறிவையே, பிரமையென்று சொல்வார்கள். ஆகவே, பொய்யறிவாக இருந்தாலும், அனுதியாக உள்ள பொய்-யறிவு அனுதிப்ரமம். அனுதியாய் இருந்தாலும்கூட, ப்ரம-மாய் இருப்பதினால், பொய்யறிவாய் இருப்பதினால், உண்மை அறிவு ஏற்பட்டவுடன், பொய்யறிவும், ப்ரமமும் போய்-விடுகிறது. ஆகவே நம்முடைய துன்பத்திற்குக் காரணம் நாம் செய்யும் செய்கைகளே. நாம் காரியங்களை, ஆசை-யினாலேயோ, மோகத்தினாலேயோ செய்ய நேரிடுகிறது. இதற்குக் காரணம் மெய்ப்பொருளின் உண்மைத் தன்மை தெரியாதிருத்தல். பொருளின் உண்மைத் தன்மை தெரியா-ததற்குக் காரணம், இரண்டு தோற்றம், இரண்டு தோற்றத்-

திற்குக் காரணம், அனாதி அவித்தை அல்லது அனாதியாய் உள்ள அவித்தை. அது நம்மிடம் இருப்பதற்கு ஆன்மாவின் உண்மை அறிவு நம்மிடம் இல்லாததினால். உண்மை அறிவு வந்துவிட்டால், இரண்டு என்ற எண்ணம் போய்விடும். இரண்டு என்ற எண்ணம் போய்விட்டால், மோஹமோ, ஆசையோ தோன்றாது—இவைகள் தோன்றாவிட்டால், காரியங்கள் செயல்படுவதற்கு விருப்பு, வெறுப்பு ஏற்படாது. இவைகள் ஏற்படுவதில்லையென்றால், நாம் ஒன்றுமே செய்யமாட்டோம். ஒன்றும் செய்யாமல் இருக்கும் போதுதான், துன்பம் வராது. இன்பம்—ஆனந்தம் வரும்.

இதற்கு வேலை செய்யாமல் சோம்பேறியாக உட்கார்ந்திருப்பது என்று பொருளல்ல. மனத்தினால்கூட சிந்தனை வேலை செய்யாமல் இருப்பதுதான் துன்பம் இல்லாமல் சுகத்தைக் கொடுக்கக்கூடிய நிலை. இப்படி மனது, மனத்தில் சிந்தனையில்லாமல் சுமுகமாக இருப்பதற்காகத்தான், மன ஒருமைப்பாடு அவசியமாகிறது. மன ஒருமைப்பாட்டிற்காகவும், மனத்தில் தூய்மை நிலவுவதற்காகவும் இறைவனை வழிபடுகிறோம். ஆகவே ஆன்மாவின் உண்மை ஞானம்—உண்மை சொரூபம், உண்மைத் தன்மையை அறிந்து கொள்வதற்கும் ஒரு சாதனமாக, இறைவழிபாடு, உருவ வழிபாடு அமைகிறது.

விக்ரக வடிவத்தில், உருவ வடிவத்திலே இறைவன் என்று பெயர் சொல்லப்படுகிறது. படைப்பது, காப்பது, அழிப்பது என்ற நிலையிலும் இறைவன் என்று பெயர் சொல்லப்படுகிறது. உலகம் அனைத்திற்கும் மாயசக்தியின் துணைகொண்டு காரணமாக ஆகும்பொழுதும், ஈஸ்வரன் என்று பெயர் பெறுகிறான். எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக ஆகும்போது பரமாத்மா என்று பெயர் வழங்கப்படுகிறது. அதே பரமாத்மா எங்கும் நிறைந்துள்ளதால், எல்லாப் பொருளிலும், எல்லாப் பொருள்களுடைய

உள்ளிலும் ஊடுருவி இருக்கும்பொழுது, ''அந்தர்யாமி'' என்று பெயர் சூட்டப்படுகிறது. எங்கும் நிறைந்துள்ள தால், ''வியாபகன்'' (விபு) என்றும் ஒரு பெயர்.

ஆகவே, ஒரே ஆத்மா சுத்தமான நிலையில் பரமாத்மா வாகவும், காரியங்கள் நடைபெறுவதற்காகவும், எல்லா மக்களும் உய்வதற்காகவும், ஈஸ்வரன், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் போன்று கோவில்களில் விக்ரகங்கள் வடிவமாகவும் ஆகிறது. ஆகவே, சாதனை நிலையில் இறைவழிபாடு, சாதனையில் பலனைப்பெற்ற பிறகு பரமாத்மா அனுபவம். வ்யவகாரிக சத்தியத்தில், அதாவது, எதுவரையில் ஆன்மாவின் உண்மை அனுபவம் ஏற்படவில்லையோ அது வரையில் சாதனங்களைச் செய்து கொண்டே தான் வரவேண்டும். சாதனங்களில் ஒன்றான இறைவழிபாடு; அவரவர்களுக்கு ஏற்பட்ட தனிக்கடமைகள், விசேஷக் கடமைகள் முதலியவைகளையெல்லாம் செய்துகொண்டே வரவேண்டும்.

ஏனென்றால், சாதனம் இல்லாமல் இலட்சிய அனுபவம் ஏற்படாது. இலட்சியத்தின் அறிவு வேறு, இலட்சியத்தின் அனுபவம் வேறு. இலட்சியத்தின் அறிவு—அதாவது, ஆன்மாவின் உண்மைத் தத்துவத்தின் அறிவு, நூல்களின் மூலமாகவும், சொற்பொழிவுகள் கேட்பதின் மூலமாகவும் ஏற்பட்டுவிடும்; ஆனால் அனுபவம் என்பது அப்பொழுது ஏற்படாது. அனுபவம் என்பது சாதனைகளைச் செய்து—கடைப்பிடித்து வரும் அனுபவத்தின் மூலமே அனுபவம் ஏற்படும்.

ஆகவே, ஆன்மாவின் உண்மை அறிவு, புஸ்தகங்களைப் படிப்பதின் மூலமாகவும், சொற்பொழிவுகள் கேட்ட பிறகும், அதுவும் ஒரு சாதனமாகவே ஆகிறது. அறிவை மாத்திரம் வைத்துக்கொண்டு சாதனை செய்யாமல் இருந்

தால் அதனுல் ஆன்மா அனுபவம் கிட்டாது. அறிவின் பயனே சாதனைகளைச் செய்து இலட்சியத்தை அடைவது தான்.

உதாரணமாக, ஓரிடத்தில் தண்ணீர் இருக்கிறது. மற்ெருரு இடத்தில் டம்ளர் இருக்கிறது. நமக்கோ தாகம் ஏற்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது டம்ளரை எடுத்து, அதில் தண்ணீரை மொண்டு குடித்தால் தாகம் தீரும் என்று எண்ணம் ஏற்படுகிறது. எண்ணத் திஞல் மாத்திரம் தாகம் தீர்ந்துவிடுமோ, தாகம் தீராது. எண்ணிய பிறகு எண்ணியபடியே டம்ளரை எடுத்து அதில் தண்ணீரை எடுத்துக் குடிக்க வேண்டும். அப்படி தாகம் தீர்ந்தவுடன் டம்ளரும் தேவையில்லை. தண்ணீர் இருக்கும் பகுதிக்கும் நாம் போகவேண்டிய அவசியமிராது. தாகம் தீரும் வரை டம்ளரும், தண்ணீரும் எப்பொழுதும் தேவை யென ஆகிறது.

அதுபோல, சம்சார தாபம் தீரும்வரை அதற்குரிய சாதனைகளைச் செய்துகொண்டே இருக்க வேண்டும். சாதனை களின் அறிவு மாத்திரமோ, இலட்சியத்தின் அறிவு மாத்திரமோ இருந்தால் மட்டும் போதாது; சம்சார தாபம் நிவர்த்தி ஆகிவிடாது. கரும்பிலுள்ள இனிப்பு ரசத்தை அனுபவிப்பதற்காகக் கரும்பைக் கடித்தபிறகு சக்கையைத் துப்பி விடுகிருேம். ஆனுல், கருப்பஞ்சாற்றை ஒரு டம்ளரில் எடுத்துக் குடிக்கும்பொழுது அந்தக் கருப்பஞ்சாற்றின் ருசி அவ்வளவாக நமக்கு இருக்காது. அதே சமயம் கரும் பைப் பல்லால் கடித்துத் தின்னும்போது சிறு வேதனை உண்டாகும். அந்த வேதனையில் ஒரு ஆனந்தமும் பிறக்கும். அதுபோல் நமக்குப் பசி ஏற்படுகிறது. நமக்கு வேண்டியது பசி அடங்குவதே. அதற்கு வேண்டியது பொருள்களே. ஆனுலும், அந்தப் பசி அடங்குவதற்கு சாமான்கள் தேடுவதற்கு நாட் கணக்கோ வருஷக் கணக்கோ கூட ஆகின்றன.

அதாவது வயலில் நெல்லை விதைக்க, நெல் விதைப்பதற்கு வேண்டி உழுதல், பரம்படித்தல், களை எடுத்தல் முதலிய காரியங்களைச் செய்து, தண்ணீர் பாய்ச்சி, பூச்சி பயிரை அழிக்காமலும் பார்த்துக்கொண்டு, இடையிடையே நல்ல மழையும் பெய்ய, சில மாதங்கள் கழித்து, நன்ருக கதிர்கள் முதிர்ந்து தலைசாய்ந்த பிறகு அவைகளை அறுத்து, போர் அடித்த பிறகு பத்திரப்படுத்தி வைத்து, சில மாதம் கழித்து அதை அரிசியாக அரைத்துப் பின்னர் அதைச் சமைக்க வேண்டிய விறகு போன்ற சாதனங்களைத் தேடி, அப்படிச் சமைத்த அன்னம் மாத்திரம் இருந்தால் அதை உட்கொள்வது சற்று சிரமம் என்று எண்ணி, அதற்குச் சகாயமாக காய்கறி முதலிய உப வெஞ்சனங்களைத் தயார் செய்து, அவைகளும் நல்ல முறையில், சரியாகப் பக்குவப் படுத்த அதனுடன் உப்பு, புளி முதலியவைகளை அளவுடன் போட்டு நல்ல முறையில் சமையல் செய்தால், அப்பொழுது நாம் அதைச் சாப்பிட்டால் பசி அடங்குகிறது. திருப்தி ஏற்படுகிறது. இந்த சின்ன வயிற்றுப் பசிக்கே, எத்தனையோ வேலைகள் செய்ய வேண்டி இருக்கின்றன. எத்தனையோ நாட்களும் சில சமயம், எத்தனையோ மாதங்களும்கூட ஆகின்றன.

உணவு உண்டால் பசி தணியும் என்று தெரியும். ஆனுல் இந்த அறிவினுல் மாத்திரம் பசி அடங்கி விடுவதில்லை. மேலே சொன்ன முறையில் பக்குவத்தில் சிறு மாறுதலோ அல்லது அரிசியாகவோ இருந்துவிட்டால், பசி அடங்கி, திருப்தி ஏற்படுவதற்குப் பதிலாக துன்பமே வரும். அத்துடன் சமையல் செய்யும்போது சமையல் செய்பவனுக்கும்கூட துன்பம் ஏற்படும். ஆகவே சாதனைகள் கூட, ஒரு வழிமுறையில் இருக்கவேண்டும்.

சாப்பிட்ட பின்னர்கூட, சமையல் செய்த பாத்திரங்களை, சமையல் செய்த இடங்களை எல்லாவற்றையுமே சுத்தம் செய்து விடுகிறோம். பிறகு பாத்திரங்களை ஒதுப்புற

மாக வைத்தும் விடுகிறோம். ஏனென்றால், அடுத்த வேளைக்கு, அடுத்தவருக்கு வேண்டும் என்று தேவைப் படுவதால். அதுபோல, இலட்சியத்தை நாம் அடைந்து விட்டாலும், சாதனைகள் நமக்கு தேவையில்லாவிட்டாலும் நம்முடைய இலட்சிய அனுபவத்தைச் சொல்லக் கூடாது. அதே சமயம் சாதனங்களைச் சொல்லி மற்றவர்களை இலட்சியப் பாதைக்கு அழைத்துச் செல்லவேண்டும். இலட்சியத்தினால் இலட்சியப் பாதையை அடைய முடியாது. சாதனத்தினால்தான் அடைய முடியும்.

இந்தச் சாதனைகள் பலவிதம். சிலர், யோகாப்பியாசத் தினால் மன ஒருமைப்பாட்டைப் பெற்று, அதன் மூலம் ஆன்ம தத்துவத்தை அறிந்து கொள்கிறார்கள். சிலர், இறைவனைப் பூஜை செய்வதின் மூலம், பக்தி செய்வதின் மூலம், நாமாவளி கீர்த்தனைகள் செய்வதின் மூலம் ஆன்ம தத்துவத்தை அறிந்துகொள்ள முயற்சி செய்கிறார்கள். சிலர், மந்திர உபதேசம் பெற்று, மந்திர ஜபம் ஜபித்து, தியானம் முதலியவைகள் செய்து அதன் மூலம் ஆன்ம தத்துவத்தை அறிந்துகொள்ள முயற்சி செய்கிறார்கள். சிலர் தனக்கென்று ஒன்றையும் வைத்துக் கொள்ளாமல், சமுதாய சேவை செய்து, அதன் மூலம் ஆன்ம தத்துவத்தை அறிந்து கொள்ள முயற்சி செய்கிறார்கள்.

எத்தனை முறையில் சாதனைகள் வேறுபட்டாலும், எல்லோரும் விரும்புவது, ''இனி பிறவாமல் இருக்க வேண்டும். துன்பமில்லாமல் இருக்க வேண்டும். ஆனந்த மாய் இருக்க வேண்டும்'' என்ற ஒரே இலட்சியமே. இத்தனை சாதனைகள் செய்தாலும், யார் தனக்கு விதிக்கப் பட்டுள்ள கடமைகளையும், விசேஷ கடமைகளையும் செய்யாமல் விட்டுவிட்டு, ஆன்ம தத்துவத்தை அறிந்து கொள்ள முயற்சி செய்கிறார்களோ அவர்களுக்கு, பரிபூர்ண பலன் கிட்டாது. அதுவும் சீக்கிரமாகவும் கிட்டாது. ஆகவே, ஆன்ம தத்துவத்தை அறிய விரும்புகிறவர்கள்,

அவர்களுடைய உடலுக்கேற்றவாறு, மனத்திற்கு ஏற்ற வாறு, ஆசைக்கேற்றவாறு, சூழ்நிலைக்கேற்றவாறு, எந்த சாதனையைச் செய்தாலும் தங்களுடைய சாமான்ய கடமை யையும், விசேஷக் கடமையையும் விடாது செய்து கொண்டே சாதனைகளையும் புரிய வேண்டும்; அப்பொழுது தான் சுலபமாகவும், சீக்கிரமாகவும், இடையூறு இல்லாத முறையிலும் சாதனங்கள் பலனை அளிக்கும். இந்த சாதனங்களை இரண்டு விதமாகச் செய்ய முடியும். அதாவது தனக்கு ஏற்பட்ட சாமான்ய கடமை, விசேஷக் கடமை, யோகம் போன்ற ஏதோ ஒரு சாதனை முதலியவைகளைச் செய்யும்போது, அதனுடைய பலனைப் பெற்றுப் பெற்று, மேலும் மேலும் அந்த வழியில் செல்வதற்குத்தான் செய்த கரரியங்களுக்குப் பலனில் ஆசையுடன் செய்வது ஒருவழி. தான் செய்யும் எந்த ஒரு காரியமும் தன்னுடைய கடமை யென்று செய்வதோடு மாத்திரம் எண்ணி, பலனில் ஆசை வைக்காமல், அந்தப் பலனை பகவத் அர்ப்பணமாக செய்து விட்டு, சாதனை செய்வது மற்ரொரு வழி.

இவைகளில் முதல் சொன்ன வழியில் படிப்படியாக, மெதுவாக சாதனைகள் உதவும். இரண்டாவது வழி மனதிற் திடமுள்ளவர்களுக்கும், நம்பிக்கை உள்ளவர்களுக்கும் மாத்திரமே உதவியாய் இருக்கும். இரண்டாவது வழி கேட்பதற்கு சுலபமாக இருக்கும். ஆனல் அதைக் கடைப் பிடிக்கும்பொழுது, கடினமாகவே இருக்கும். இந்த இரண்டாவது மார்க்கத்தை, ''நிஷ்காம்ய கர்மயோகம்'' என்று கூறுவார்கள். அதாவது தன் கடமைகள், சாதனைகள் எல்லாவற்றையும் ஒன்றுகூட விடாமல், சரியான முறையில் செய்துகொண்டு அதன் பலனுக்காகச் செய்யாமல், அதனல் ஏற்படும் பலன்களைக்கூட பகவத் அர்ப்பணமாகச் செய்து கொண்டு வருவது என்று பொருள்.

ஆகவே க்ருஷ்ண பகவான்கூட பகவத் கீதையில் இந்த இரண்டாவது முறையான நிஷ்காம்ய கர்ம யோகத்தை நிறைய வலியுறுத்தி உபதேசம் செய்து இருக்கிருர். சாதனை

களைப்பற்றிக் குறிப்பிடுகையில், ஆகாரம் உட்கொள்வதில் சாத்வீகத்தன்மை இருக்க வேண்டும். ஸ்நானம், தானம் செய்வதில் சாத்வீகத் தன்மை இருக்க வேண்டும். மனத்தில் நல்ல சாத்வீக எண்ணங்கள் வளரவேண்டும். இதிலிருந்து தொடங்கி பெரிய சாதனைகள் வரையில், செய்தால், அப்பொழுது ஆன்ம அனுபவம் சித்திக்குமென்று உபதேசித்துள்ளார். இந்த மனிதப் பிறவியால் மாத்திரமே இந்த சாதனங்கள் செய்வதற்கு வாய்ப்பு இருக்கிறது. மற்ற எந்தப் பிறவிக்கும் இந்த அரிய வாய்ப்புக் கிடையாது.

காக்கை, குருவி, நாய் போன்ற பிறவியல்ல மனிதப் பிறவி. மிகவும் உன்னதமான, புனிதமான பிறவி. இந்தப் பிறவியில் நாம் முயற்சி செய்தால், பிறவியில்லாப் பெரும்பேற்றை அடைய முடியும். அப்படி இந்த மனிதப் பிறவியில் முயற்சி செய்யாவிட்டால், பிறகு எப்பொழுது இந்த மானிடப் பிறவி திரும்ப வருமோ, அது நமக்குத் தெரியாது. அப்படியே அந்த மனிதப் பிறவி வந்தாலும், அப்பொழுதுள்ள சூழ்நிலை முதலியவைகள் ஆன்மீக சாதனைக்கு அனுகூலமாக இருக்குமோ பிரதிகூலமாக இருக்குமோ அது தெரியாது.

இப்பொழுது நாம் அனுபவிக்கும் சிறு இன்பங்களெல்லாம், பேரின்பம் அடைவதற்கு விழிகாட்டியாகவே கொள்ள வேண்டுமே தவிர, இந்தச் சிறு இன்பத்தை அனுபவிக்கத்தான் இந்த மனிதப் பிறவியென்று நினைத்து, காலமெல்லாம் இதிலேயே மூழ்கிவிடக்கூடாது. கல்கண்டு இருக்கிறது. அதைச் சாப்பிட்டால் இனிப்பு ஏற்படுகிறது. அதைச் சாப்பிடுவதற்காக வேகமாகக் கடித்தால், அப்பொழுது தவறி நாக்கும் கடிபட்டு துன்பம் வேறு வருகிறது. ஆகவே சிறிய இன்பம் அனுபவிப்பதில்கூட, ஒரு முறை வேண்டியிருக்கிறது. அதே கல்கண்டை அரைமணி நேரம்வரை வாயிலேயே வைத்துக்கொண்டிருந்தால், அப்பொழுது நிதானமாக கல்கண்டின் ரசத்தை அனுபவிக்க

முடியும். கல்கண்டு கரைந்த பிற்பாடுகூட, அந்தக் கல்கண்டின் இனிப்பு வெகு நேரம் வரையில் இருக்கும். அதுபோல் சாதனைகளும் நிதானமாக, வழி முறையோடு செய்தால், அப்பொழுது சாதனை செய்யும்பொழுதும் ஆனந்தம் கிடைக்கும். சாதனை செய்த பிற்பாடும் ஆனந்தம் கிடைக்கும்.

புராணங்களில், தர்ம நூல்களில் பாவ புண்யங்களின் விளக்கங்களும், கைலாசம் வைகுண்டம் முதலிய லோகங் களின் விளக்கங்களும் நிறையச் சொல்லப்பட்டிருக்கும். இதெல்லாம் சாதனைகளின் பலனே—அதாவது ''வ்யவகார சத்திய''த்தின் பலனே. பாரமார்த்திக சத்தியத்தை அடை வதற்கு ஆன்ம அனுபவத்தை அடைவதற்கு, வ்யவகார சத்தியத்தின் காரியங்களெல்லாம் சாதனைகளே!

ஆகவே வேதங்களிலும், தர்மசாஸ்திர நூல்களிலு ஸ்மிருதிகளிலும், புராணங்களிலும், நீதி நூல்களிலும், வாழ்க்கை முறைக்கு ஏற்றவாறு காரியங்கள் சொல்லப் பட்டிருக்கிறது. அவை எல்லாவற்றையுமே, ஆன்மாவை அறிந்துகொள்வதற்குச் சாதனமாக, அறியாமை அகலு வதற்குச் சாதனமாக என்று எண்ணி, அதற்காக எல்லாக் காரியங்களையும் செய்து, அந்தக் காரியங்களின் மூலம் சம்ஸ் காரத்தைப் பெற்று, பலனைப்பெற்று, அதன் மூலம் மனத்தின் சுத்தத்தைப்பெற்று—மன ஒருமைப்பாட்டைப்பெற்று, அதன் மூலம் ஆன்ம தத்துவத்தை அடைந்து—உண்மையான, நிலையான, சாஸ்வதமான ஆனந்தத்தை அடைவோமாக! இந்தத் தத்துவங்கள் எல்லாம் அதிகமாக நமக்குத் தெரியாத திலுல், வேதங்கள், உபநிஷத்துக்கள் உபதேசிக்கின்றன. வேதம் வ்யாவஹாரிக ஸத்யத்தையும் உபநிஷத் பார மார்த்திக ஸத்யத்தையும் கூறும்.

ஹிந்து மதத்திலுள்ள கடவுள் வழிபாட்டு கர்ம சித்தாந்தம், புனர்ஜன்ம வாதம் முதலியவைகள் எல்லாம் வ்யாவஹாரிக ஸத்யம்—ஒன்றே ஆத்மா, அழிவில்லாதது,

ஆனந்தமானது, எல்லாவற்றிற்கும் அதீதமானது. பரமாத்மாவைத் தவிர, மற்றெல்லாம் அழியக்கூடியது, மாறக்கூடியது. ஸ்திரத்தன்மை இல்லாதது என்ற தத்துவமானது, பாரமார்த்திக ஸத்யம். ஆகவே ஹிந்து மதத்திலுள்ள சாதனம், சாத்யம், வ்யாவஹாரிகம்—பரமார்த்திகம் முதலியவைகளைத் தெளிவாகப் புரிந்துகொண்டுவிட்டால், ஹிந்து மதத்தின் கருத்துக்களில் முரண்பாடு என்பதே தோன்ருது.

சரித்திர ஆசிரியர்களில் சிலர், இது புரியாமல் வேத காலம் வேறு, உபநிஷத் காலம் வேறு என்று, வேதத்திற்கும் உபநிஷத்திற்கும் வேற்றுமையும் கூறி, வேதம், உபநிஷத் இவை உண்டானதற்கு ஒரு காலமும் கற்பித்து, பேசியும் வருகிருர்கள். எழுதவும் எழுதுகிருர்கள். அவர்கள் அப்படிக் கூறுவதற்குக் காரணம், வேதங்களிலே வேள்விகளும், இந்திரன், அக்கினி, யமன், வருணன் போன்ற தேவதைகளின் பெயர்களோடுகூட, வழிபாட்டு முறைகளும், அவைகளுக்கு வேள்விகளும் சொல்லப்பட்டிருப்பதும், உபநிஷத்களோவென்ருல், ஒரே ஆன்மா, அந்த ஆன்மாவை அறிவதன் மூலமாகத்தான், பிறப்பு இறப்பு இவைகளிலிருந்து விடுபட முடியும். ஆகவே தேவதா வழிபாடு, வேள்வி முதலியவைகளெல்லாம், அழிவுள்ள அற்ப சுகங்களை அளிக்கக்கூடிய காரியங்களே எனக்கூறுவதுமாகும். எனவே உலகில் ஜனங்கள் முதலில் வாழ்க்கைக்குத் தேவையாயுள்ள பொருள்களை அடைவதற்கு வேள்வி முதலிய முயற்சிகளைச் செய்து வந்தார்கள். கொஞ்ச காலத்திற்குப் பிறகும் அவர்களுக்கு அதன் மூலம் பரிபூர்ண மன அமைதி கிட்டாததினுல், அவர்கள் உபநிஷத்தில் சொல்லப்பட்ட கருத்துக்களை அனுசரித்து, தியானம் உபாசனை முதலியவைகளைச் செய்ய முயற்சி செய்தார்கள். வேத காலத்தில் இறைவழிபாடு, உபாஸனை என்பது கிடையாது. பின்னர் உபநிஷத் காலத்திலேதான் இறைவழிபாடும், ஆன்ம வழிபாடும் தோன்றின என்றும் கூறுகிருர்கள்.

வேதங்களோ, உபநிஷத்களோ எல்லாமே ஒரு குறிப்பிட்ட காலத்தில் ரிஷிகளால் எழுதப்பட்டவைகளே. ஏனென்றால் வேதங்களும் உபநிஷத்களும், பல ரிஷிகளின் சம்பாஷணைகள், பெயர்கள் முதலியவைகளைத் தாங்கி வருவதால், அவர்களால், அவர்கள் வாழ்ந்த காலத்தில் எழுதப்பட்டன என்று காரணம் கற்பிக்கிறார்கள்.

இது தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள், சரித்திரம் எழுதும் ஆசிரியர்கள் போன்றவர்கள் நமது இந்து சித்தாந்தத்திற்கு ஏற்றதல்ல. இந்து சித்தாந்தப் பிரகாரம் வேதம் என்றால், உபநிஷத்தும் அதில் அடக்கமே. வேதத்தின் ஒரு பாகம் உபநிஷத். ஆகவே வேதம் வேறு, உபநிஷத் வேறு என்று சொல்வதற்கு எந்தவித ஆதாரமும் கிடையாது.

தனி உபநிஷத்தாக இன்று பல உபநிஷத்துகள் தென்பட்டாலும், அந்த உபநிஷத்தின் சாந்தி மந்திரங்களைப் பார்க்கையில் அவை எந்த வேதத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளதோ அந்த வேத சாந்தி மந்திரங்களையே கொண்டுதான் அந்த உபநிஷத்துகள் தொடங்கப்படுகின்றன. ஆகவே அந்த வேதங்கள் கிடைக்காவிட்டாலும், அந்த வேத சாகைகள் கிடைக்காவிட்டாலும், அந்த வேதங்களின் சாகைகளுக்குள்ள உபநிஷத்துகள் இருக்கின்றன. அது தவிர, வேத சம்பந்தமில்லாமல் தனியான உபநிஷத் என்று ஒன்றும் கிடையாது. ஆகவே எத்தனை வேத சாகைகள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறதோ அதற்கேற்ப உபநிஷத்துக்கள் இருக்கும். ஆகவே வேதங்களுடன் தான் உபநிஷத்துக்கள் இருக்கின்றனவே தவிர, தனியாக உபநிஷத் என்று ஒன்றும் கிடையாது. அதே போலத்தான், வேத காலம், உபநிஷத் காலம் என்று சொல்வதும் சரியல்ல. ஏனென்றால் வேதம் ஒருவராலும் ஒரு நாளிலும் உண்டுபண்ணப்படாமல், இறைவனைப் போல் அனாதி என்கிறோம்.

வேதங்கள் இன்று புத்தக வடிவில் காணப்பட்டாலும், முன்பும் சரி, இப்பொழுதும் சரி வேதங்களைக் காதால் கேட்டுத்தான் தெரிந்துகொண்டார்களே தவிர, வெறும் புஸ்தகத்தைப் பார்த்து, படித்துத் தெரிந்து கொள்வதென்பது முடியாத காரியம். வேதங்களின் கருத்துக்களையும், உபநிஷத்தின் கருத்துக்களையும் மட்டும் அறிந்துகொள்வதற்கு, சமஸ்கிருத அறிவின் மூலம் புத்தக வடிவிலுள்ளது உதவும். இதைத் தவிர, வேதங்களைத் தெரிந்து கொள்வதற்கு, புஸ்தகங்கள் ஒருகாலும் உதவாது. ஏனென்றால் வேதங்களில் முக்கியமானது, ஸ்வரமும், உச்சரிப்பும். இவைகள் புஸ்தகத்தின் மூலமாகத் தெரிந்து கொள்ள முடியாது. ஒருவர் சொல்ல, மற்றவர்கள் அதைக் கேட்டுப் பயிற்சி மூலம்தான் தெரிந்துகொள்ள முடியும். வேதங்களிலே, பல ரிஷிகளின் பெயர்கள், பல தேவதைகளின் பெயர்கள் வந்தாலும், அனுதியாய் உள்ள வேதங்களில், முக்காலமும் உள்ள விஷயங்கள் கூறப்பட்டிருக்கும். ஆகவே ரிஷிகளால் உண்டு பண்ணப்பட்டது என்று சொல்வதற்கு எந்தவிதமான ப்ரமாணமும் கிடையாது.

ஆகாசத்திலுள்ள வேத சப்த ஒலிகளை மஹரிஷிகள் தங்களிடமுள்ள திவ்ய தபோ பலத்தினுல், காதுக்கு விசேஷமான கேட்கும் சக்தியைப் பெற்று, ஆகாசத்திலுள்ள அந்த மந்திரங்களைத் தங்கள் காதுகளின் மூலம் உணர்ந்து, அதை மனத்திலே நிறுத்தி, அனுபவித்து, அதைத் தன் சிஷ்யர்களுக்கு உபதேசித்து வந்தார்கள். அப்படி உபதேசித்த ரிஷிகளின் பெயர்களும், அவர்கள் தாங்கள் அனுபவித்த வேதங்களில் உள்ள தேவதைகளின் பெயரும், அந்தத் தேவதையை வழிபட்டால் ஏற்படக் கூடிய பலனும், அந்த வேத மந்திரங்கள் எந்த விருத்த சந்தத்தில் வந்திருக்கிறதோ அந்த விருத்த சந்தத்தின் பெயரும், சிஷ்யர்களுக்கு மறந்து போகாமல் இருக்க, சிஷ்யர்களும் தங்களுக்கு உபதேசித்த குருவின் நினைப்

புடனும், ஆசீர்வாதத்துடனும்கூட வேதங்களைச் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆகவேதான் வேதங்களின் முதன் முதலில் ரிஷி, சந்தஸ் தேவதை, பலன் இவைகள் சொல்லப்பட்டு, பின்னர் வேத மந்திரங்கள் சொல்லப் படும்.

வேதங்கள் ருக், யஜுர், சாம, அதர்வண என நான்கு பெயர்களுடன் விளங்குகின்றன. துவாபரயுகக் கடைசியில், வேத வியாஸர் வேதத்தை அநேகக் கிளைகளாகப் பிரித்து வைத்தார். அதாவது ருக் வேதம் இருபத்தியொரு கிளை களாகவும், யஜுர் வேதம் நூற்றியொரு கிளைகளாகவும், சாம வேதம் 1,000 கிளைகளாகவும், அதர்வண வேதம் ஒன்பது கிளைகளாகவும் பிரிக்கப்பட்டது.

துவாபர யுகம் வரை, மனிதனுடைய ஆயுள், புத்தி, சக்தி இவைகளெல்லாம் அதிகமாய் இருந்ததினால், அப்போது கிளைகளாகப் பிரிக்க வேண்டிய அவசியம் இல்லாமல் இருந்தது. கலியுகத்தில், ஆயுள், புத்தி, சக்தி, சிரத்தை முதலியவைகளெல்லாம் குறைந்துவிடும் என்ற காரணத்தினால். ஒரு கிளையாவது தன் ஆயுட்காலத்திற்குள் படிக்கட்டும் என்ற நோக்கத்துடன் வேதங்களைக் கிளைகளாகப் பிரித்து வைத்தார் ஸ்ரீவேதவியாஸர். இந்த வேதங்கள் ஸம்ஹிதா, ப்ராம்மணம் என இரண்டு பாகங்களாக இருக் கின்றன. ப்ராம்மண பாகத்தில் உபநிஷத்துக்கள் இருக் கின்றன.

இந்த வேதங்களைப் படிப்பதற்காக, உலகில் எப்பொழு தும் ஒருமுறை இருந்துகொண்டே இருக்கிறது.

உலகில் எத்தனை கோடிப் பிராணிகள் இருந்தாலும், எல்லாப் பிராணிகளுடையவும் ஜனங்களுடையவும் நன்மைக்காக, உலகில் நடைபெற வேண்டிய காரியங்களைப் போட்டி, பொறாமை முதலியவைகள் இல்லாமல் நல்ல

முறையில் நடைபெறுவதற்கு, ஜனங்களிடையே ஒவ்வொரு பிரிவினருக்கும் ஒவ்வொரு காரியங்கள் வகுக்கப்பட்டு, அதே பிரகாரம் அவை செயல்பட்டும் வந்துகொண்டிருக்கின்றன.

ஒவ்வொரு வகுப்பாரும் ஒவ்வொரு காரியங்களைச் செய்தாலும், காரியங்களில் ஏற்றத் தாழ்வோ, காரியங்களைச் செய்பவர்களிடம் ஏற்றத் தாழ்வோ பார்க்காமல் தாங்கள் செய்யும் காரியங்களுக்கு ஏற்றவாறு சூழ்நிலையை மாத்திரம் உருவாக்கிக்கொண்டு அவரவர்கள் தங்கள் கடமைகளைச் செம்மையாகச் செய்து வந்தார்கள். செய்து கொண்டும் வருகிறார்கள். இந்தக் கடமைகளைச் சரிவரச் செய்து வருவதன் மூலம், நாட்டிலும் காரியங்கள் செம்மையாய் நடைபெற்று வந்தன. செய்பவர்களின் மனத்தில் ஒரு விதத் திருப்தியும், மன அமைதியும் இருந்து வந்தன.

எப்பொழுது ஜனங்கள் தங்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட சாமானியக் கடமையையும், விசேஷக் கடமையையும் மறந்து, பொருளிலும், பதவியிலும் ஆசை கொண்டு மாற்றான் கடமைகளைச் செய்யத் தொடங்கினார்களோ அது முதல் நாட்டிலும் சரி, சரியான முறையில் காரியங்கள் நடைபெறவில்லை. ஜனங்களிடத்திலும் சரி, மன அமைதி என்பதும் அற்றுவே இல்லை. ஆகவே, ஜனங்களில் எந்தெந்தப் பிரிவினருக்கு என்னென்ன காரியங்கள் வகுக்கப்பட்டதோ அந்தந்தக் கடமைகளை அவரவர்கள் சரிவரச் செய்து கொண்டு வரவேண்டும்.

கடமைகளில் உயர்ந்தது, தாழ்ந்தது என்ற மனப்பான்மையோ, போட்டியோ, பொறாமையோ வந்து விட்டால் காரியம் நடைபெறாது; பயனும் இருக்காது; மன அமைதியும் கிட்டாது. ஒரு சரீரத்தில் அநேக உறுப்புக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு உறுப்புக்களின் மூலம்தான் ஒவ்வொரு காரியம் செய்துவருகிறோம். எந்தெந்த உறுப்பின்

மூலம் எந்தெந்தக் காரியம் நடத்தி வருகிறோமோ அதற்காகவே அது படைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, உறுப்புக்களிலோ உறுப்புக்களின் மூலம் செய்யப்படும் காரியங்களிலோ ஏற்றத்தாழ்வு என்பது கிடையாது; எல்லாம் ஒரு சரீரத்தின் உறுப்புக்களே!

கண் பார்க்கத்தான் செய்யும், காது கேட்கத்தான் செய்யும், காதின் மூலம் பார்க்க முடியாது. கண்ணின் மூலம் கேட்க முடியாது. இது ஒரு நியதி. கைகள் இரண்டிருந்தாலும், இரண்டு கைகளும் எதையும் செய்யும் சாமர்த்தியம் பெற்றிருந்தாலும், வலது கையால் செய்யும் காரியத்தை இடது கையால் செய்தால் அது ஒப்புக்கொள்ளவும் படமாட்டாது. நன்றாகவும் இருக்காது. அதேபோல் இடது கையால் செய்யும் ஒரு காரியத்தை வலது கையால் செய்தால் ஒப்புக்கொள்ளவும் மாட்டார்கள். அது நன்றாகவும் இருக்காது.

கைக்கடிகாரம், மோதிரம் போன்றவைகளை அணிந்து கொள்ள இரு கைகளும் தகுதியாய் இருந்தாலும் அவைகளை இடது கையில் கட்டிக்கொள்வது, அணிந்துகொள்வது பழக்கம், அழகும்கூட. அதை விட்டுவிட்டு கைக்கடிகாரத்தை வலது கையில் கட்டிக்கொள்வது 'Fashion' ஆக இருக்கலாம். ஆனால், உலக மக்கள் பொதுவாக இடது கையில்தான் கடிகாரம் கட்டிக்கொள்வது என்ற பழக்கத்தில் வெகு காலமாக இருந்து வருகிறார்கள். இடது கை தன்னுடைய காரியத்தைச் செய்யும்பொழுது, அந்தக் காரியம் அருவருப்பான காரியமாக இருந்தாலும் அதற்காக அந்தக் கையை நாம் இழந்துவிடுவதோ அல்லது இது அசுத்தமான காரியத்திற்கே உபயோகப்படுவது என்று அதை ஒதுக்கித் தள்ளுவதோ இல்லாமல், அந்தக் கையிலேயே கைக்கடிகாரம், மோதிரம் முதலியவைகளை அணிந்து அந்தக் கையை மேன்மைப்படுத்துகிறோம்.

வாந்தி எடுக்கிறோம். அப்பொழுது உடலிலுள்ள கெட்டுப்போன் பொருள் வெளியே வருகிறது. மலமூத்திரம் கழிக்கிறோம். அப்பொழுது உடலிலுள்ள வேண்டாத பொருள் வெளியேறுகிறது. மலமூத்திரம் வெளிவருகிறது. இறைவனின் படைப்பு. வாய்மூலம் வரும் வாந்தி நம்முடைய உடற்கூற்றின் கோளாறு சம்பந்தப்பட்டது. காரியங்கள் ஒன்ருக இருந்தாலும், அதன் முறை மாறிப் போகும்போது அதனுல் எவ்வளவோ துன்பங்கள் உண்டாகின்றன.

மின் விசிறி நன்ருக வேலே செய்வதற்காக மூன்று முக பிளக்கை சுவிட்ச் போர்டில் வைக்கிறோம். அதே சமயம் ரேடியோ சப்தம் கேட்பதற்காக இரண்டு முக பிளக்கு ஒன்றை சுவிட்ச் போர்டில் பொருத்துகிறோம். இரண்டும் பிளக் என்ற பெயரில் ஒன்ருக இருந்தாலும் இரண்டும் மின்சாரத்தில் பொருத்தப்பட்டிருந்தாலும், மின் விசிறிக்குள்ள பிளக் மின்விசிறிக்குத்தான் உபயோகமாகும். ரேடியோவுக்குள்ள பிளக் ரேடியோவுக்குத் தான் உபயோகமாகும். அவைகளே மாற்றிப் பொருத்த முடியாது. பொருத்துவதற்கு முயற்சி செய்தால் அதன் விளைவு உள்ள பிளக் வீணுகப் போவதுடன், மற்றும் வேருெரு பிளக் முன் பிளக் எத்தனே முகத்துடன் இருந்ததோ அதே மாதிரிதான் பண்ணிவைக்க வேண்டி வரும். ஏனென்ருல் பிளக்கினுல் பொருத்தப்படும் ஆதாரத்தை அனுசரித்துத்தான் பிளக் தயாரிக்கப்படும்.

உலகில் நடைபெற வேண்டிய காரியங்களெல்லாம் ஒவ்வொரு பிரிவினரின் மூலமாகவே வெகுகாலமாக நடைபெற்று வருவதினுலும் உலகில் நடைபெற வேண்டிய காரியங்களெல்லாம் ஒவ்வொரு வகுப்பினராலே செய்யப்படவேண்டும் என்று நமது வேத நூலில் சொல்லப்பட்டிருப்பதினுலும் இவ்விதமே செய்து வந்தால்தான் செய்து வருபவர்களுக்கும் நன்மை, நாட்டிற்கும் நன்மை.

மனிதர்கள் எல்லோரும் ஒரே இரத்தத்தோடு கூடியவர்களாய் இருந்தாலும், மனித சமுதாயத்தில் மாற்றம், ஏற்றம், தாழ்வு என்ற மனப்பான்மை இல்லாமல் இருந்தாலும் தாய், தந்தை, அக்கா, அண்ணன், தங்கை, தம்பி என்ற உறவின் மூலம் பழகுவதிலிருந்து, மரியாதை கொடுப்பதிலிருந்து கல்யாணம் போன்ற சடங்குகள் செய்வதிலிருந்து வேறுபாடுகள் இருந்துதான் வருகின்றன. இருந்தும் அந்த வேறுபாட்டினுல் குடும்பம் வேறுபடவில்லை. ஒரே குடும்பம், அதே பந்துத்துவம் எல்லாம் இருந்துதான் வருகின்றன. ஆகவே வேறுபாட்டினுல் ஒற்றுமையைக் கண்டால், அங்கே வேறுபாடு மறையும். மனேபாவத்தில் வேற்றுமை மறைந்தால்தான், சாஸ்வதமான, நித்யமான ஒற்றுமை வலுக்கும்.

ஒன்ருகச் சாப்பிடுவதினுலோ, ஒன்ருகக் கல்யாணம் செய்துகொள்வதினுலோ, ஒன்ருகப் படிப்பதினுலோ, ஒன்ருக உடை உடுத்துவதாலோ மாத்திரம் ஒற்றுமை வளராது. மனிதனின் மன அடிப்படையின் மூலமாக, வெளி ஒற்றுமை வர வேண்டும். ஒரு மனிதனுக்கு இரண்டு ஏக்கரா பூமி இருக்கிறது. அந்த இரண்டு ஏக்கராவையும் ஒரே சமமான மனேபாவத்தின் மூலம் பார்க்க வேண்டும். விவசாயம், அதாவது பயிர் செய்யும் காலத்தில், ஆங்காங்கு வரப்புகள் போட்டுத்தான் பயிர் செய்ய வேண்டும். வரப்புகள் போடுவது வேற்றுமை மனேபாவத்தோடுமல்ல, மாற்ருனுடைய இடத்தைக் குறிப்பிடும் அளவுகோலுக்காகவுமல்ல. தன்னுடைய பயிர் செழுமையாக நன்ருக வளர்வதற்காகத்தான் அந்த வரப்புகள் போடுவதெல்லாம். தண்ணீர் பாய்ச்சுவது, விதை விதைப்பது, அறுவடை செய்வது எல்லாமும் ஒன்ருய் இருந்தாலும்கூட வரப்பு கட்டித்தான் வேலை செய்கிறேம். அதுபோல, ஒவ்வொரு வகுப்பாரும் உலக நன்மைக்காகவும், தன் நன்மைக்காகவும் ஒவ்வொரு காரியத்தைச்

செய்ய வேண்டும் என்ற வரம்பு இருந்துதான் ஆக வேண்டும். அப்பொழுதுதான் அந்தக் காரியம் நல்ல முறையில் நடைபெறும்.

ஒவ்வொரு வகுப்பாரும் ஒவ்வொரு காரியங்களைச் செய்து வருகிறார்கள். அந்தக் காரியங்களுக் கேற்றவாறு சூழ்நிலை தேவையாயிருக்கிறது. சூழ்நிலை மாறிவிட்டால் காரியங்கள் நடைபெறுவது என்பது கஷ்டமாகிவிடும். மனிதனுடைய குணத்திலிருந்து, பழக்க வழக்கத்திலிருந்து, அவன் பிறந்த வகுப்பிலிருந்து, அவனைச் சுற்றி வெளியிலுள்ள பொருள்கள் வரை எல்லாம் சூழ்நிலையே. இந்தச் சூழ்நிலைக்கேற்றவாறுதான் அவனுடைய காரியங்கள் மாறுகின்றன. ஆனல் உலக நன்மைக்காகவும், தன் நன்மைக்காகவும், உலகம் தோன்றின காலம் முதல் அனுதியாய், மனிதன் என்னென்ன காரியங்கள் செய்ய வேண்டும் என்று விதிக்கப்பட்டு, அதேபோல், அனுதியாய் செயல்பட்டுக்கொண்டும் வருகிறதோ, அதேபோல் தான் நாமும் செய்துகொண்டு வரவேண்டும்.

ஒருவன் ஒரு காரியம் செய்வதற்குத் தகுதி, அவனுடைய வகுப்பே, அவனுடைய பிறப்பே! அவன் அவனுக்கேற்ற கடமையைச் சரிவரச்செய்து வருவதற்கு ஏற்ற மனோநிலையில் இருந்து எல்லாச் சூழ்நிலையும் ஏற்படுத்திக் கொடுப்பது மற்ற எல்லோருடைய கடமையாகும். சூழ்நிலை கடமை செய்வதற்கு உதவியாக இருக்குமே தவிர, சூழ்நிலை காரியத்தைச் செய்துவிடாது. ஆகவே என்னிடம் சூழ்நிலை இருக்கிறது, நான் இந்தக் காரியத்தைச் செய்கிறேன் என்று தனக்கேற்ற கடமையை விட்டுவிட்டு, மற்றவர்கள் கடமையைச் செய்ய வந்துவிட்டால், இந்தக் கடமையும் சரிவர நடக்காது; அந்தக் கடமையும் சரிவர நடைபெருது. ஆகவே சூழ்நிலைக்கேற்றவாறு காரியங்களைச் செய்யாமல், தன் கடமைகளுக்கு ஏற்றவாறு காரியங்களைச் செய்து கொண்டு சூழ்நிலையை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

வேதங்கள் படிப்பதற்கும், வேதங்களில் சொல்லப் பட்ட கருத்துக்களின்படி கர்மாக்களைச் செய்வதற்கும், ஏற்ற சூழ்நிலை நதி தீரம்; அதாவது ஜல வசதியுள்ள பகுதி, பால் நிறையக் கிடைக்கக்கூடிய பசுமாடுகள் இருக்கக் கூடிய பகுதி, அரசு, புரசு போன்ற சமித்துகள் கிடைக்கக்கூடிய அரச மரம், புரச மரங்கள் உள்ள பகுதிகளே! மேற் சொன்ன இந்தச் சமித்துக்களைச் சேகரிப் பதற்குக் கூடவே அரிவாள் கத்தி போன்ற ஆயுதங்கள் வைத்திருப்பது.

வேள்விகள் செய்யும்பொழுது. சில வேள்விகளுக்கு ஆட்டின் மாமிசத்தை ஹோமம் செய்யவேண்டி வரும். பிறகு ஹோமம் செய்த மிச்சத்தில், மிகவும் சிறிய அளவு ப்ரஸாதமாக உட்கொள்ளவேண்டும் அல்லது அதை முகர்ந்து பார்க்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதால், இந்த கர்ம காண்ட சூழ்நிலையில் ஆடும் இடம் பெறுகிறது.

மேலும் இந்த வேள்வியைச் செய்கிறவர்கள், வேதம் படிப்பவர்கள் இல்லறத்தோடு கூடியவர்களாக இருந் தாலும், சாமான்யமாக பொதுஜனங்கள் எவ்விதம் உடை உடுத்துகிறார்களோ அதாவது பாண்ட், சர்ட், பனியன், கோட் வகைகளும், அதோடுகூட குளிர் காலத்தில் விசேஷ மாக என்னென்ன உடை உடுத்துகிறார்களோ அவை களெல்லாம் அணியாமல், வேஷ்டி மாத்திரம் உடுத்திக் கொண்டு, அதையும் பஞ்சகச்சமாக உடுத்திக்கொண்டு மேலே ஒரு துண்டு மட்டும் போட்டுக்கொண்டு வேள்வி களைச் செய்து வந்தார்கள். அப்படியேதான் செய்தும் வர வேண்டும்.

இந்த விஷயங்களையெல்லாம் பூரணமாக அறிந்து கொள்ளாத ஒரு சில வெளிநாட்டு, உள்நாட்டு சரித்திர ஆசிரியர்கள் வேதம் படிப்பவர்களை, வேதத்தில் சொல்லப் பட்ட வேள்வி முதலியவைகளைச் செய்தவர்களை ஆரியர்கள் என்று பெயர் சூட்டி, இந்த ஆரியர்கள் வெளி தேசத்தி

லிருந்து நதி ஓரமாக வாழ்ந்து வந்து இந்தியப் பகுதிக்குள்ளும் ஊடுருவி, தங்கள் கலாச்சாரத்தை வளர்த்துக்கொண்டார்கள் என்கிறார்கள். இந்தியாவிற்குள் ஆரியர்கள் வந்ததாக ஒரு காலத்தை அவர்கள் குறிப்பிட்டு, ''ஆரியர் நாகரீக காலம் அவர்கள் பண்பாடு'' என்ற தலைப்பில் சரித்திரம் எழுதுகிறார்கள்.

பண்பாட்டைப்பற்றி விவரிக்கையில், ஆரியர்களுக்கு உடை உடுத்திக்கொள்ளக்கூடத் தெரியாது. ஏதோ ஒரு சிறு துணியையே உடையாக உடுத்திக்கொள்வார்கள். நதிதீரத்தில்தான் வசிப்பார்கள். ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் கையில் சதா சர்வ காலமும் கத்தி, அரிவாள், கழி போன்ற ஆயுதங்கள் இருக்கும். அவர்கள் காலத்தில், கல்லிலிருந்தும் மரத்திலிருந்தும் நெருப்பை வரவழைத்தார்கள். அக்னி, இந்திரன் போன்ற தேவதைகளை வழிபட்டுக்கொண்டிருந்தார்கள் என்பன போன்றவையெல்லாம் எழுதி வந்தார்கள்.

ஆனால் நாமோ, வேள்விக்காக, யாகத்திற்காகப் பசுப் பால் தேவை. சமித்துக்கள், தர்ப்பை முதலியவைகளைக் கொண்டு வருவதற்காகக் கத்தி, அரிவாள் தேவை. யாகத்திற்காக ஆடு தேவைப்படுகிறது. அடிக்கடி சரீர சுத்தி ஸ்நானம் செய்வதற்காக நதிதீரம் தேவைப்படுகிறது. ஆகவே வேதம் ஓதுபவர்கள், வேள்வி செய்பவர்கள் நதிதீரத்தில், தண்ணீர் உள்ள பகுதிகளில் வசித்து வந்தார்கள் என்று கூறினோம்.

இதைப் பூரணமாக அறிந்துகொள்ளாதவர்கள், ஆரியர்களின் உடை, சூழ்நிலை இவைகளையும் புரிந்துகொள்ளாமல், ஆரிய நாகரீகம் என்றும், ஆரிய காலம் என்றும், அவர்கள் வெளியிலிருந்து வந்தார்களென்றும் ஆதாரமில்லாமல் கூறி வருகிறார்கள். இதேபோல் ''திராவிட நாகரீகம், திராவிடர்கள் காலம்—திராவிடர்கள் பண்பாடு'' என்றும்

சிலர் சரித்திரங்கள் எழுதி வருகிறார்கள். அத்துடன் ஆரியர் களுக்கு முன்பாக, இந்தியாவிற்கு வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள் திராவிடர்கள் என்றும் எழுதுகிறார்கள். அவர் களுடைய கலாச்சாரத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது, விவசாயம் செய்வது, ஆடு மாடு மேய்ப்பது, மரத்தை, கல்லை, பாம்பை, இரும்புக் கம்பி போன்றவைகளை வழிபடுவது என்றும் சொல்லுகிறார்கள்.

ஆரியர்கள், திராவிடர்களுக்கிடையில் முதலில் சண்டை வந்தது. பின்னர் அவர்கள் ஒற்றுமையாய்ப் போய் பாரதநாடு முழுவதும் பரவிவிட்டதாகவும் கூறுகிறார்கள், இவ்விதம் இவர்கள் எழுதுவதற்கு எந்தவித ஆதாரமும் கிடையாது. இந்துக்களில் ஒரு பிரிவினர் விவசாயம் செய்வது, அந்த விவசாயத்திற்கும் குடும்பத்திற்கும் தேவையான ஆடு, மாடுகளை வைத்துக்கொள்வது மேய்ப்பது, கிராம சக்திகளை வழிபடுவது போன்றவை களில் ஈடுபட்டனர். அநேகமாகக் கிராம சக்திகள் உள்ள இடங்களில் உருவமில்லாத ஒரு கல்லோ, இரும்பாலான சூலங்களோ, அல்லது மரத்தாலாக்கப்பட்ட உருவமோ பெரும்பாலும் இருக்கும்.

விவசாயம் நன்கு நடப்பதற்கும், ஜனங்களின் உடல் ஆரோக்கிய வாழ்விற்கும், அதாவது மகமாயி, அம்மை காலரா போன்ற தீய நோய்கள் வராமல் தடுப்பதற்கும், கிராம தேவதா வழிபாடு இன்றியமையாததாக இருந்து வரு கிறது. அதை இன்றும் விவசாயிகள் செய்துவருவதைக் கண்கூடாகக் காண்கிறோம். இவ்விதமாக நிலைமை இருக்க இந்த வரலாறு புரியாதவர்கள் ஆரியர்கள் பண்பாடு வேறு, திராவிடர்கள் பண்பாடு வேறு; இவ்விருவரும் வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறியவர்கள், முதலில் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக்கொண்டவர்கள் என்றெல்லாம் பிதற்றுத குறையாக ஆதாரமில்லாமல் எழுதிக்கொண்டு வருகிறார்கள்.

'ஆரிய' என்ற சொல்லிற்கு, 'கௌரவத்திற்கு உகந்தவன், மரியாதைக்குரியவன்' என்று பொருள். ஆகவே இந்துவாயுள்ள ஒவ்வொருவரும் ஆரியனே! அதாவது ஹிந்து மதத்தில் சொல்லப்பட்ட பிரகாரம் யார் யார் எந்தெந்தக் கடமைகளைச் செய்து வருகிறார்களோ அவர்கள் எல்லோருமே கௌரவத்திற்கு உகந்தவர்கள்; மரியாதைக் குரியவர்கள்! அப்படி அல்லாமல் தங்கள் கடமைகளை மறக்கும் பொழுதோ அல்லது செய்யாமல் விடும்பொழுதோ அப்பொழுது பரஸ்பரம் மரியாதை குறைந்துவிடுகிறது; கௌரவமும் குறைந்துவிடுகிறது.

திராவிட என்ற சொல் ஒரு மொழியையோ, இனத்தையோ என்றும் குறிப்பிடவில்லை. பழைய நூல்களில், 'திராவிட' என்ற சொல், ஒரு தேசத்தை, அதாவது திராவிட தேசத்தைக் குறிப்பிடுகிறது.

சில்ப சாஸ்திர நூல்களில் திராவிட சிற்பம், நாகர சிற்பம் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆதிசங்கரர் எழுதிய சௌந்தர்ய லஹரி என்ற நூலில் "திராவிட சிசு" என்று வருகிறது. எந்த ஒரு நூலிலும், புஸ்தகத்திலும், ஆரிய மக்கள் உயர்ந்தவர்கள், திராவிட மக்கள் தாழ்ந்தவர்கள் என்று வித்தியாசம் பாராட்டிக் குறிப்பிடவில்லை. ஆதி சங்கரர் "திராவிட சிசு" என்று சொல்லுமிடத்தில், ஞானசம்பந்தப் பெருமானின் வரலாறு குறித்து எழுதுகிறார். திராவிட சில்பம் என்று சொல்லும்பொழுது அது சங்கேத பேராக, அடையாளக் குறியின் பெயராக அந்தப் பெயர் விளக்கப்படுகிறது. திராவிட தேசம், திராவிட மொழி இவைகளைப் பற்றிப் பேசுகையில், ஒரு வகுப்பார் இருக்கும் இடத்தையோ, ஒரு வகுப்பார் பேசும் பாஷையையோ குறிப்பிடவில்லை.

திராவிட என்ற சொல்லால், "பஞ்ச திராவிட" மென்று புஸ்தகங்களில் குறிப்பிட்டிருக்கிறது. அதாவது, 1. கேரளத்தோடு கூடிய தமிழ்நாடு, 2. கர்னாடகம்,

3. ஆந்திரா, 4. மஹாராஷ்டிரா, 5. குஜராத்தி. இந்த ஐந்து மாநிலங்களுக்கும் திராவிட தேசம் என்று பெயர். தற்சமயம் அரசியலில்கூட பேசும்பொழுது, திராவிட நாடு என்று குறிப்பிடும்பொழுது, அது தமிழ்நாட்டை மாத்திரம் குறிப்பிடவில்லை. பக்கமுள்ள கன்னடம், ஆந்திரா, மலையாளம் இந்த மூன்று மாநிலங்களையும் சேர்த்துக் கொண்டார்கள். இப்படி இவர்கள் சேர்த்துக்கொண்டதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை. அதேபோல் திராவிட மொழி என்னும் பொழுது, அங்கே தமிழ் மாத்திரம் என்பது பொருளல்ல. முன் சொன்ன ஐந்த மாநிலங்களிலோ அல்லது நாலு மாநிலங்களிலோ வழங்கிவரும், பேசப்பட்டு வரும் மொழிகளுமகூட திராவிட மொழிகளே என்று சொல்லப்படவேண்டும்.

ஆகவே திராவிட மொழியோ, ஆரிய மொழியோ தனித்தனி மொழியல்ல. மேற்சொன்ன இந்த ஐந்து மாநிலங்களிலும் எல்லா இனத்தவர்களும் வசிக்கிறார்கள். அப்படி வசிப்பவர்கள் எல்லோரும் அந்தந்த மாநிலத்தில் வழங்கப்படும், பேசப்படும் மொழிகளையே இன்றும் பேசிக் கொண்டு வருகிறார்கள். திராவிடமொழி என்பதுபோல் ஆரியமொழியென்று ஒன்று கிடையாது. ஆனால் ஆரிய மொழியென்று எங்கு குறிப்பிடப்படுகிறதோ அங்கெல்லொம் ஸம்ஸ்கிருத மொழியையே அது குறிப்பிடுகிறது. ஸம்ஸ்கிருத மொழியானது, எப்பொழுதும் மக்களிடையே ஸாதாரணமாகப் பேசும் பாஷையாக இருந்ததில்லை.

வேதங்கள், சாஸ்திரங்கள், தத்துவ சாஸ்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள், தர்ம சாஸ்திரங்கள் முதலியவைகளிலும் வீட்டில் பூஜை செய்யும்பொழுதும், கோவில்களில் பூஜை செய்யும்பொழுதும், வீட்டில் நடக்கும் கர்ம காண்ட காரியங்களிலும், கோவில்களில் நடக்கும் உத்ஸவம், பிரதிஷ்டை முதலிய காரியங்களிலும் மாத்திரமே ஸம்ஸ்கிருதம் கையாளப்பட்டது. இவைகளெல்லாம் ஸம்ஸ்கிருதத்தில் செய்வதற்கு முக்கியக் காரணம், அனாதியாய்

உலகம் தோன்றின காலம் முதல் ஒருவராலும் உண்டு பண்ணப்படாமல் வரக்கூடிய வேதங்கள் அந்த மொழியில் இருப்பதே. அந்த வேதங்களில் சொல்லப்பட்ட கடமை களைச் செய்யும்பொழுது, அந்த வேதங்கள் எந்த மொழியில் உள்ளனவோ அதே மொழியில் அந்தக் காரியங்கள் செய்து வருவதால், அதன் மூலமந்திர சித்தியும், தெய்வீக சக்தியும், நல்ல ஸம்ஸ்காரங்களும் ஏற்படுவதற்கு அது வழி கோலாக ஆகிறது.

ஆண்டவனைத் துதிக்கையில், பிரார்த்தனை செய்கையில் மன உருக்கம் வேண்டும். அதற்கு இன்ன பாஷை யென்றிராமல், எந்த பாஷை மூலமாகவும் பாட்டுக்கள் பாடித் துதிக்கலாம். அப்படிப் பாடின பாட்டின் கருத்துக்களை மாத்திரம் மனத்தில் இருத்தி மனம் உருகலாம். ஆனால் கோவில் பூஜை, வீட்டு பூஜை, வீட்டில் நடக்கும் சடங்குகள், கோவில்களில் நடக்கும் விசேஷங்கள் இவைகள் மன உருக்கத்திற்காக ஏற்பட்டதல்ல. ஸம்ஸ் காரத்திற்காகவும், சுத்திக்காகவும் ஏற்பட்டதே! ஆகவே தேசத்தில் மக்களிடையே நடைபெறும் விவகாரத்திற்கும், அந்தந்தச் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு வழங்கிவரும் பாஷை களையே பேசிக்கொண்டு வரலாம். பேசிக்கொண்டும் வருகிறார்கள். ஆனால், வீடு, கோவில், க்ஷேத்திரம் முதலிய வைகளில் சடங்குகளுக்காக மாத்திரம் ஸம்ஸ்கிருதம் அன்றும் இன்றும் வழங்கப்பட்டு வந்துகொண்டிருக்கிறது. என்றும் வழங்கப்படவேண்டியதும் அதுவே!

ஆகவே ஸம்ஸ்கிருதமானது, ஆரிய மொழியென்று சொன்னாலும், வடமொழியென்று சொன்னாலும் அது ஒரு இனத்தார் பேசும் மொழியல்ல; தத்துவங்களைக் காப்பாற்று வதற்கு உபயோகப்பட்ட மொழி மாத்திரமே. ஆரிய மொழியை, ஸம்ஸ்கிருத மொழியை வட மொழியென்று சொல்லுகிறார்கள். வடமொழியென்பதினால், வடக்கிலுள்ள வர்கள் பேசும்மொழி என்பதல்ல, அல்லது வடக்கிலிருந்து

வந்த மொழியுமல்ல. பொதுவாக வடக்கில் தேவர்கள் முதலியவர்கள் வசிக்கும்படியான சுவர்க்கம் முதலியன இருக்கிறது என்று நூல்கள் கூறுகின்றன. வடக்கு என்பது ஒரு திசையைக் குறிக்கும் சொல். உதாரணமாக நாம் நமது வீட்டில் கிழக்கு முகமாக உட்கார்ந்துகொண்டு, வடக்குப் பக்கத்தில் இருக்கும் ஒரு பாத்திரத்தைக் கொண்டுவா என்கிறோம் என்பதாக வைத்துக்கொள்வோம். அப்பொழுது நமது வீட்டிற்குள்ளேயே வடக்குத் திசை இருக்கிறது. அதே மாதிரி நமது கிராமத்திலேயே வடக்கு வீதி, தெற்கு வீதி என்றும் வீதிக்குப் பெயர் வைக்கிறோம். மாவட்டங்களிலும் வட மாவட்டம், தென் மாவட்டம் என்றும் பெயர் வைக்கிறோம். நாட்டிலே, தமிழ் நாட்டைத் தவிர மற்றப் பகுதிகளைக் காசிவரை குறிப்பிடும்பொழுது, வடநாடு, வடதேசம் என்று குறிப்பிடுகிறோம். ஆனால் காசி முதல் கன்னியாகுமரி வரை உள்ள எல்லா மக்களும் தென் இந்தியர்களே, தென் திசையைச் சேர்ந்தவர்களே!

மேரு பர்வதம் என்று ஒரு பர்வதம் இருக்கிறது. அந்தப் பர்வதத்தைச் சுற்றி சூரியன் வரும்பொழுது, திசை சொல்லப்படுகிறது. சூரியன் உதிக்கும் திசையைக் கிழக்கு என்றும், உதிக்கின்ற பகுதியிலிருந்து நேராகப் பின் பகுதியில் விழும்பொழுது, அதை மேற்கு என்றும், இரண்டு பக்கங்களில் உள்ளது தெற்கு, வடக்கு என்றும் குறிப்பிடுகிறோம். அதையே ஸம்ஸ்கிருதத்தில் சூரியன் உதிக்கும் திசைக்கு ''பூர்வ'' என்றும், அஸ்தமிக்கும் திசைக்கு ''பஸ்சிமா'' என்றும், இரண்டு பக்கங்களுக்கும் முறையே ''தக்ஷிண'' ''உத்ரா'' என்றும் பெயர். மேரு பர்வதத்திற்கு முன் பக்கம் ''பூர்வ'', பின் பக்கம் ''பஸ்சிமா'' தென் பக்கம் ''தக்ஷிண'' வடபக்கம் ''உத்ரா'' என்ற பொருளில் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற பொருளில் சங்கீதப் பேராகச் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர மக்கள் வசிக்கும் பகுதிக்கோ, தேசத்திற்கோ, பாஷைக்கோ, வடக்கு, தெற்கு என்று சொல்வதற்கு எந்தவிதமான ஆதாரமும் கிடையாது.

மேரு பர்வதத்திற்குத் தென்பகுதியில் பாரத வர்ஷம் என்று சொல்லப்பட்ட நமது பாரத நாடு இருக்கிறது. அப்படி நமது பாரதநாடு, பாரத வர்ஷம் மேருவுக்குத் தென்பகுதியில் இருப்பதால், இந்த நாட்டிற்கு, இந்த நாட்டில் வசிக்கும் மக்கள் எல்லோருக்கும் முறையே தென் நாடு என்றும் தென் இந்தியர்கள் என்றுமே குறிப்பிட வேண்டும். வடக்கில் உள்ள மேரு பருவதத்தின் மேல் பகுதியில் தேவர்கள் வசிக்கும் பகுதி. அதாவது சொர்க்க லோகம் முதலிய பகுதிகள் இருக்கின்றன. தேவதைகள், மந்திரங்களெல்லாம் ஸம்ஸ்கிருத மொழியில் இருப்பதினுல் ஸம்ஸ்கிருத மொழியையே வடமொழியென்றும், ஆரிய மொழியென்றும் கூறிவிட்டார்கள் போலும்.

ஆகவே ஆரியமொழி, வடமொழி என்று சொல்லப் படுவது அது ஒரு இனத்தாருடைய மொழி அல்ல. தேவதை களேயும், மந்திரங்களேயும், கர்ம காண்டங்களேயும் சடங்கு களேயும் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளே எடுத்துச் சொல்லப் பயன்படுத்தப்பட்ட ஒரு மொழி. இந்துக்களாய்ப் பிறந்த யாராயிருந்தாலும், எந்த வகுப்பைச் சேர்ந்தவர் களாய் இருந்தாலும், பிறந்தது முதல் இறப்பது வரை அவரவர்கள் செய்யும் சடங்குகளெல்லாம் ஆன்மாவின் சம்ஸ்காரத்திற்காகச் செய்ய வேண்டியதாக இருப்பதால், ஸம்ஸ்கிருத மொழியில், புனிதமான மொழியில், பூஜிக்கத் தகுந்த மொழியில், காரியங்கள், சடங்குகள் இவைகள் நடைபெறுகின்றன. ஆகவே எந்தக் காலத்திலும் ஸம்ஸ்கிருத மொழி, ஆரிய மொழி, வடமொழி என்று சொல்லக்கூடிய மொழியானது, எப்பொழுதும் பொதுவாகப் பேசும் மொழியாகவோ, ஒரு இனத்தாருடைய மொழியாகவோ இருந்ததில்லே.

இந்து மதத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கடமை விதிக்கப்பட்டுள்ளதால், அதில் ஸம்ஸ்கிருதத்திலுள்ள வேதம் படிப்பது. வேள்விகளேச் செய்வது, புராணம்


A. No. 3235
LIBRARY, KOVILOOR

படிப்பது முதலியவைகளெல்லாம் ஒரு வகுப்பாருடைய கடமைகள் ஆகிவிட்டதால், ஸம்ஸ்கிருதம் ஒரு வகுப்பாருடைய மொழியென்று கூறும் பேச்சுக்கு இடமாகிவிட்டது. ஆனால் தன் கடமைகளைச் செய்பவர்கள், ஸம்ஸ்கிருத மொழியிலுள்ள வேதம், சாஸ்திரம், தத்துவம், கடமைகள் இவைகளைக் கடைப்பிடித்து வந்தாலும், அவரவர்கள் அந்தந்தப் பகுதியிலுள்ள மொழியிலேயே பேசிக்கொண்டு வந்திருக்கிறார்கள். எப்பொழுதும் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். எப்பொழுதும் உலக வாழ்க்கையில் அவர்கள் ஸம்ஸ்கிருதம் பேசிக்கொண்டிருக்கவில்லை. இதை அறியாத சிலர் ஸம்ஸ்கிருத மொழியை, இறந்த மொழியென்று கூறுகிறார்கள். அது ஒரு நாள் பிறந்து இருந்தால்தானே இறப்பதற்கு? அப்பொழுது அதை இறந்தது என்று சொல்லலாம். அதை விட்டுவிட்டுப் பிறக்காத ஒரு மொழியை இறந்தது என்று எப்படிச் சொல்வது? ஸம்ஸ்கிருத பாஷையில் உள்ள வேதங்கள் முதலியவைகள் ஒரு நாளும் ஒருவராலும் உண்டாக்கப்படவில்லையென்று முன்பே சொன்னோம். ஸம்ஸ்கிருதம் எப்பொழுதும் பேசும் ஒரு பாஷையாக இருந்து, தற்பொழுது பேசாத பாஷையாக இருந்தாலும் அதை இறந்த பாஷையென்று சொல்லலாம். அப்படியுமல்ல! அத்துடன் வாழ்க்கை பூராவும் பேசும் படியாக ஸம்ஸ்கிருதம் ஒரு நாளும் இருந்ததுமில்லை! ஆகையினாலும் அதை இறந்த பாஷை என்று சொல்வதில் பொருள் இல்லை.

பொதுவாக உலகில் பேசக்கூடிய பாஷைகள் எல்லாமே, அந்தந்தப் பகுதியில் வசிக்கும் மக்களின் சூழ்நிலைக்கு ஏற்றவாறும், அவர்கள் பழக்க வழக்கங்களுக்கு ஏற்றவாறும் உருவாகின்றன. ஒரு பாஷைக்கு முக்கியமானது இரண்டு. ஒன்று எழுத்து, மற்றொன்று பேச்சு. முதன் முதல் பேச்சு வரும், பிறகுதான் எழுத்துக் கற்றுக் கொள்வோம். இது உலகின் நடைமுறை. அதுபோல் எந்தப் பாஷையாய் இருந்தாலும், முதலில் காதால் கேட்டு பாஷை

வரும். அதைத் தொடர்ந்து பிறகுதான் எழுத்துக்களை அறித்து கொண்டு, கேட்டதைக் குறிப்பு எடுத்துக்கொள்ள முயற்சி செய்வோம். எழுத்து என்பது, அந்தந்தச் சூழ் நிலைக்கு ஏற்றவாறு எழுத எழுத, பழகிக்கொண்டே வளருகிறது.

எழுத்து இலக்கணம், பாஷை இலக்கணம் என்று இலக்கணம் இருவகைப்படும். எழுதுவதுபோல் பேச முடியாது, பேசுவதுபோல் எழுத முடியாது. அப்படிச் செய்தால் அது நன்ருகவும் இராது. பொதுவாக எழுத்து என்பது ஞாபகக் குறிப்புக்காகக் கையாளும் ஒரு வடிவம். தற்காலத்தில் இந்த எழுத்தின் மூலமாக, அறியாத பல விஷயங்களைக்கூட அறிந்துகொள்ள ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது. சொற்பொழிவு மூலமாகவும் விஷயங்களை அறிந்துகொள்ளலாம், புஸ்தகங்கள் மூலமாகவும் விஷயங்களை அறிந்து கொள்ளலாம். ஆனுல் சொற் பொழிவு மூலம் விஷயங்களைப் புரிந்து கொள்கையில் சந்தேகம் வந்தால் அப்பொழுதோ அல்லது பிறகோ சொற்பொழிவாற்றியவர் மூலம் சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள முடியும். ஆனுல் புஸ்தக வடிவிலிருந்து விஷயங்களைப் படித்து அறிந்துகொள்கையில் ஒரு சந்தேகம் தோன்றினுல், அந்தப் புஸ்தகத்தை எழுதிய மனிதனைக் காண முடியுமோ முடியாதோ, அல்லது அந்த மனிதர் உயிருடன்தான் இருக்கிருரோ இல்லையோ? இந்த நிலையில் அந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள ஒரு வாய்ப்பும் இராது.

மனிதன் இறந்த பிற்பாடும்கூட, அவன் எழுதின புஸ்தகங்கள் இருக்கும். புஸ்தகங்களில் விஷயங்கள் தெளிவாக எழுதப்பட்டிருந்தாலும், அதைப் படிப்பவனுக்கு புரியாமல் சந்தேகம் ஏதேனும் வந்துவிட்டால், அப்பொழுது அதைத் தெளிவுபடுத்த வேறு ஒரு மனிதன் தேவைப்படும். ஆகவே தான் வெகு காலமாக முதலில் பேச்சு, பிறகு அந்தப் பேச்சு

மறந்து போகாமல் இருப்பதற்குச் சாதகமாக, நினைவுக் குறிப்பாக இருப்பதற்காக எழுத்து என்று வந்தது. ஆகவே மனத்தில் உள்ள கருத்தை வெளிக்கொண்டு வருவதற்கு வாய்ப்பாக பாஷை அமைந்து இருக்கிறது.

நம்முடைய உடல் சுகமாக வாழ்வதற்காகவும், நம் முடைய ஆன்மா நல்ல நிலையை அடைவதற்காகவும், வழி முறைகளை வகுத்துக் கொடுப்பது பாஷை. நாம் பேசும் பாஷையில் நம்முடைய குழந்தைகளுக்கே சொன்னால்கூட சில கருத்துக்கள் அவர்களுக்குப் புரியாது. அதற்காகக் குழந்தையின் உள்ளத்திற்கு ஏற்றமுறையில் நடைமுறையில் உள்ள பாஷையின் மூலமாக (மழலைச் சொல் மூலமாக) நாம் பேசி அந்தக் குழந்தைகளுக்குப் புரியும்படி தெளிவு படுத்த வேண்டும். ஆகவே ஒரு பாஷையென்பது மனித னுக்கு அறிவு வளர்ப்பதற்கு வழி காட்டியாக ஆகிறது.

உலகில் அநேக பாஷைகள் இருக்கின்றன. அநேகமாக எல்லாப் பாஷைகளிலுமே, எழுத்துக்களை அனுசரித்துப் பேசுவது என்பது இருக்கவே இருக்காது; பேசும் பாஷையை அனுசரித்துத்தான், எழுத்துக்களின் வடிவங்கள் அமையும். உதாரணமாக பால், பயம் என்ற இரண்டு வார்த்தைகளை எடுத்துக் கொண்டால் அதில் இரண்டு வித சப்தங்கள் தொனிக்கின்றன. தமிழைத் தவிர மற்ற மொழிகளில் எழுதுகையில், பால் என்பதில் உள்ள "ப" வுக்கும், பயம் என்பதில் உள்ள "ப" வுக்கும் எழுத்து மாறும். ஏனென்றால், பால் என்று சொல்லும்பொழுது ஒரு விதமான பகர உச்சரிப்பும், பயம் என்று சொல்லும் பொழுது ஒருவிதமான பகர உச்சரிப்பும் இருக்கிறது. ஆனால் தமிழ் மொழியில் பேசும் பொழுது பயம் என்று பேசுவோம். அதையே எழுதும்பொழுது "பயம்" என்று எழுதாமல், அதே அர்த்தம் தொனிக்கக்கூடிய "அச்சம்" என்று எழுதுவோம். ஏனெனில் தமிழில் பயம் என்று சொல்லுவதை அப்படியே பயம் என்று எழுதினால் அதற்குப்

பொருள் அச்சம் என்ற பொருளில் வராது. மாருக மாருன கருத்தும் தோன்றும். ஆகவே தமிழில் எங்கு உச்சரிப்பு மாறுகிறதோ அங்கெல்லாம் வார்த்தையையே அநேகமாக மாற்றிவிடுவார்கள்.

தமிழ் மொழி ஒன்றைத் தவிர, மற்றெல்லா பாஷைகளிலும் பேசும் சமயத்தில் எந்தெந்த ஒலிகள் எழுகின்றனவோ அந்தந்த ஒலிக்கேற்றவாறு, எழுத்துக்கள் இருக்கின்றன. ஆகவே இந்தியாவிலுள்ள மொழிகளில் மட்டும் பேசுவதில் ஏற்படும் ஒலிகளுக்கு ஏற்றவாறு எழுத்துக்கள் உண்டு. அங்கு பேச்சும் எழுத்தும் ஒன்ருகவே இருக்கும். தடுமாற்றமே ஏற்படாது. தமிழ் நாட்டுப் பழக்கத்தில் கிரந்த எழுத்து என்று ஒரு எழுத்து உண்டு. இப்பொழுதும் கூடச் சிலர் தமிழ் எண்ணிக்கைக்கு அந்த கிரந்த எழுத்தில் உள்ள எண்ணிக்கையைத் தான் உபயோகப்படுத்துகிருர்கள். கிரந்த எழுத்தில், தமிழ் எழுத்தில் போலன்றி உச்சரிப்புக் கேற்றவாறு மற்ற மொழிகளைப் போலவே எல்லா எழுத்துக்களும் இருக்கும்.

பழங்கால சிலாசாசனங்களில், கல்வெட்டுக்களில் கூட இவ்விதம் தமிழ், கிரந்தம் கலந்தே நிறைய இருக்கின்றன. கல்வெட்டுக்களில் ஆண்டுகளின் பெயரைக் குறிப்பிடுகையில் கிரந்த எழுத்தில் ஸம்ஸ்கிருத ஆண்டைத்தான் குறிப்பிடுவார்கள். அதாவது விக்ரம சகம் 1,200 என்று குறிப்பிடுகையில், விக்ரம சகம் என்பது கிரந்த எழுத்தில் இருக்கும் 1,200 என்ற எழுத்தும் அதே கிரந்த எண் குறிப்பிலேயேதான் இருக்கும். தமிழ் மொழியில் இல்லாத ஒலிகளை, ஆனுல் பேச்சிலே வழங்கும் ஒலிகளுக்கு ஏற்ற வண்ணம், கிரந்த எழுத்து மொழியே வெகு காலமாக இருந்து வருகின்றன.

பொதுவாக உலகெங்கிலும் ஸம்ஸ்கிருதத்திற்கென்று தனி மொழி கிடையாது. ஆனுலும் உலகெங்கிலும் ஸம்ஸ்கிருத பாஷை வியாபித்திருக்கிறது. அது எப்படியெனில்,

அந்தந்தப் பிரதேசத்தில் வழங்கப்படும் மொழிகளின் மூலமாகவே ஸம்ஸ்கிருத பாஷை வளர்ந்து உலகெங்கிலும் பரவியிருக்கிறது. ஸம்ஸ்கிருத பாஷை பிரம்மத்திற்குச் சமானம். அதாவது பரம்பொருளுக்குச் சமானம். பரம் பொருள் எங்கும் நிறைந்திருக்கிறது. அதற்கென்று ஒரு குறிப்பிட்ட பகுதியோ ஒரு தேசமோ கிடையாது. இதைத் தான் ''சர்வ வியாபகத்வம்'' என்பார்கள்.

அந்தப் பரம்பொருளை அறிந்துகொள்வதற்கு, விக்கிரக வடிவங்கள், உருவ வடிவங்களின் தோற்றங்கள் உதவியாக ஆகிறது. விக்கிரக வடிவங்கள் ஆயிரக்கணக்கில் இருக் கின்றன. அதில் எந்த விக்கிரகங்களை வழிபட்டாலும், பரம் பொருளின் வழிபாடாகவே அமைந்து அதன் பலனை நாம் அடைகிறோம். ஆகவே கண்ணுக்குத் தெரியாத, உருவ மில்லாத, எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளை அறிந்து கொள்வதற்கு, சாதனமாக உருவ வழிபாடு எவ்விதம் ஹிந்து சமயத்தில் கடைப்பிடிக்கப்படுகிறதோ, அதேபோல அந்தப் பரம்பொருளை அறிவதற்கு உதவியாக இருக்கக்கூடிய வேத, புராண, இதிசாசங்களுக்கும் ஸம்ஸ்கிருத பாஷையில் இருந்துகொண்டு, ஆனால் அந்த ஸம்ஸ்கிருத பாஷைக் கென்று ஒரு தனி எழுத்து, ஒரு தனிப் பிரதேசம் என்றிராமல், எல்லா தேசத்திலும், எல்லா மொழியிலும் அந்த பாஷையே கலந்து நிற்கிறது.

எந்த ஒரு பாஷையாய் இருந்தாலும் அல்லது மொழி யாய் இருந்தாலும் அவைகளிலுள்ள ஸம்ஸ்கிருதச் சொற்களை எடுத்துவிட்டால், அந்த பாஷையின் அழகு, நடை, பெருமை முதலியவைகளெல்லாம் பெருமைப்படும் வகையில் இருக் காது. பேசும்பொழுது ஸம்ஸ்கிருத உச்சரிப்புடன்கூடிய ஒலிகளையே எழுப்பிப் பேசுகிறோம். எழுதும்பொழுதும், குறிப்பு எடுக்கும்பொழுதும் அதற்கு ஏற்றவாறே மொழி, எழுத்து, அமைத்துக்கொண்டால்தான் குறிப்பு நன்கு விளங்கும். ஆகவே, நாம் பேசும் பாஷையை அனுசரித்துத் தான் எழுத்தும் இருக்க வேண்டும்.

சிலர் தமிழ் மொழிதான் பிரதான, பழமையான மொழி, அதிலிருந்துதான் ஒலிகளுடன்கூடிய எத்தனை மொழிகள் இருக்கின்றனவோ அத்தனையும் பிறந்தவை என்கிறார்கள். அதற்கு அவர்கள் கூறும் காரணங்களாவது: ஒவ்வொரு எழுத்தினுடைய முதல் எழுத்து மாத்திரமே தமிழில் இருக்கின்றன. இந்த எழுத்தினுடைய விளக்கங்களாகவே மற்ற மொழிகளிலுள்ள எல்லா எழுத்துக்களும் அமைந்து இருக்கின்றன. உதாரணமாக க, ங, ச, ட, ண, த, ந, ப, ம முதலான எழுத்துக்கள் இருக்கின்றன. இவைகளுடைய விளக்கங்கள்தான் க, கா, கி, கீ, கு, கூ, ங, ஙா, ஙி, ஙீ, ச, சா, சி, சீ, சு, சூ போன்ற முதலிய விளக்கங்களே! அதே போலத்தான் 'க'வினுடைய விளக்கம்தான் மாறுபட்ட ஒலிகளுடன் கல்பகம், கணபதி முதலிய சொற்களில் 'க'வின் விளக்கங்களாக வருகின்றன. கல்பம் என்று உச்சரிக்கும் பொழுது, தமிழிலுள்ள 'க'வையே உச்சரிக்கிறோம். கணபதி என்று சொல்லும்பொழுது, உச்சரிப்பில் ஒலி மாறுபடுகிறது. ஒலிக்கு ஏற்றவாறு பொருளும் மாறுபடுகிறது. ஆனால், தமிழில் எழுதும்போது கல்பகம், கணபதி இரண்டுமே ஒன்றாக எழுதுகிறோம். வேறு மொழிகளில் கல்பகம், கணபதி இரண்டு சொற்களையும் சொல்லும்பொழுது எந்த ஒலியுடன் உச்சரிக்கிறோமோ, அதே ஒலிக்கு எழுதும்பொழுதும் அந்த ஒலிக்கு ஏற்றவாறு எழுத்துக்களை அமைக்கிறோம். அப்படி அமைக்கும் எழுத்துக்களானது தமிழிலுள்ள எழுத்துக்களின் விளக்கமே யென்று கூறுகிறார்கள். அதாவது, கமலம் என்ற சொல்லின் 'க'வானது கணபதி என்ற சொல்லில் 'க'வின் விளக்கமாக வருகிறது.

ஆகவே, தமிழ் எழுத்திலுள்ள ஒவ்வொரு எழுத்தினுடைய விஸ்தாரமே, மற்ற எழுத்துக்களிலுள்ள ஒலிகளைக் கொடுக்கும் எழுத்துக்களின் வடிவம். தனியாக ஒலிகளைக் கொடுக்கக்கூடிய எழுத்துக்களுக்கென்று உருவமோ உற்பத்தியோ கிடையாது என்று கூறுகிறார்கள். மேலும், முதன்முதல் தமிழ்மொழி தோன்றிற்று. அதுவும் அகஸ்தியரால் தோற்று

விக்கப்பட்டது. பிறகுதான் ஸம்ஸ்கிருதம் வந்தது. அதையும் கொஞ்ச நூற்றுண்டுகளுக்கு முன்புதான், ''பாணினி'' என்ற ஒருவர் அந்த ஸம்ஸ்கிருதத்திற்கு இலக்கண சாஸ்திரங்களை இயற்றினுர். அது முதற்கொண்டுதான் அந்த மொழியும், பாஷையும் வளர்ச்சி ஏற்பட்டிருக்கும் என்று கூறுகிருர்கள்.

ஆனுல், பாஷா சாஸ்திரம் என்று சொல்லக்கூடிய (Philology) சாஸ்திரத்தில், பாஷை தோன்றியிருப்பதற்கும், எழுத்து தோன்றியிருப்பதற்கும் வித்தியாசங்கள் நிறைய இருக்கின்றன. அந்த சாஸ்திரப் பிரகாரமும் பாஷையில் ஸம்ஸ்கிருதம்தான் பண்டையக் காலத்திலிருந்து வந்த ஒரு பாஷையென்றும், எழுத்தில் ''பிராம்மி லிபி'' என்று சொல்லக்கூடிய எழுத்துதான் ஆரம்பத்திலிருந்து அதாவது, பண்டையக் காலத்திலிருந்து வந்துகொண்டிருக்கிறது. அதன் பரிணுமம்தான் மற்றெல்லா எழுத்துக்களும் என்பது தெளிவு. பிராம்மி லிபி என்று சொல்லும் பொழுதே, அதுகூட ஸம்ஸ்கிருத பாஷையின் சொற்களே! ஆகவே பிராம்மி லிபி தோன்றியிருப்பதற்கு முன்பிருந்தே ஸம்ஸ்கிருத பாஷை வழக்கத்தில் இருந்து வருகிறது என்று தெரிகிறது. மேலும் 'க' வினுடைய விளக்கம்தான், மற்றெல்லா எழுத்துக்களின் ஒலிகளும் என்று சொல்லப் படுவதும் சரியல்ல. 'க' என்று உச்சரிக்கும்பொழுது, அந்த ஒலி எந்த இடத்திலிருந்து பிறக்கிறதோ, உண்டாகிறதோ, அதே இடத்திலிருந்து மற்ற ஒலிகளையும் எழுப்பினுல், அப்போது அது அதனுடைய விளக்கங்கள், பரிணுமங்கள் என்று கூறலாம். ஆனுல் கமலம் என்று சொல்லக்கூடியதிலுள்ள 'க' விற்கான பிரயத்தனம் வேறு. கங்கா, கணபதி என்று சொல்லும்போது, ஒலிகளின், எழுத்துக்களின் பிரயத்தனம் வேருக ஆகிறது. ஆகவே வெவ்வேறு பிரயத்தனங்களைக் கொண்ட எழுத்துக்களை ஒன்றினுடைய பரிணுமமாகச் சொல்ல முடியாது. மேலும் பாணினி மஹரிஷியைச் சொல்லி, அவர் காலத்திலும் பிற்காலத்திலும் ஸம்ஸ்கிருதம் உண்டாகி இருக்க வேண்டுமென்று

சொல்லப்பட்டது. அதுவும் சரியல்ல. பாணினி மஹரிஷிக்கு முன்பாகவே எவ்வளவோ இலக்கணகர்த்தாக்கள் இருந்திருக்கிறார்கள். தொல்காப்பியத்திலேயே ''ஐந்திர வியாகரணம்'' என்பதைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தத் தொல்காப்பியம் தமிழுக்கு வியாகரண நூல்; அதிலேயே ஐந்திர வியாகரணத்தைப்பற்றிச் சொல்லியிருப்பதால், அதற்கு முன்பிருந்தே ஸம்ஸ்கிருத நூல்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அகஸ்தியர் தமிழ் மொழிக்கு மூத்தவர். அவரால் நூல் வளர்ந்தது என்று கூறுகிறோம், அந்த அகஸ்தியர் பேரிலேயே ஸம்ஸ்கிருத பதம் இருக்கிறது. அவரும் வடமொழியில், ஸம்ஸ்கிருதத்தில் வல்லவராக இருந்தாரென்று வரலாறு கூறுகிறது. பாணினி மஹரிஷியின் இலக்கண சாஸ்திரத்தில் வேதங்களின் சப்தங்களைப் பற்றியும், எழுத்துக்களைப்பற்றியும் கூடச் சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்களோ, புராணங்களோ இவைகளெல்லாமே உலகம் தோன்றின காலம் முதற்கொண்டு வந்திருக்கிறது என்று முன்பே சொல்லிவிட்டோம். ஆகவே உலகம் தோன்றின காலம் முதல் ஸம்ஸ்கிருத பாஷையானது இருந்து வருகிறது. அதுவும் அந்தந்தப் பகுதியில் பேசப் படும், வழங்கப்படும் மொழிகளின் மூலமாக அது வளர்ச்சி அடைந்தும் வந்திருக்கிறது.

ஆகவே ஸம்ஸ்கிருத பாஷையானது, தத்துவங்களையும், தர்மங்களையும் காப்பாற்றிக்கொண்டு அன்றும், இன்றும், என்றும் இருந்துகொண்டுதானிருக்கும். அந்தப் பாஷை ஒருகாலும் அழியாது. அதனால்தான் அந்தப் பாஷைக்கு ''அமரவாணி'' என்று ஒரு பெயர். இதை அறியாத சிலர், ஸம்ஸ்கிருதத்தை (Dead Language) அதாவது இறந்த பாஷையென்று கூறுகிறார்கள். ஓம்கார ஸ்வரூபமாக பரம் பொருள் விளங்கி வருகிறது. அந்தப் பரம்பொருளுக்கு ஆரம்பம், முடிவு என்பது கிடையாது. ஓம்காரம் என்பதும் ஸம்ஸ்கிருதச் சொல்லே. ஆகவே அதற்கும் அழிவு கிடையாது.

ஸம்ஸ்கிருதத்தைப் பொதுவாக எல்லோரும் படிக்க லாம். தத்துவங்களையும் தெரிந்துகொள்ளலாம். ஆனால் வேதங்களை ஸ்வரத்துடனும், உச்சரிப்புடனும், சில நியமத் துடனும் படிக்க இருப்பதால், ஹிந்து சமயத்தைச் சேர்ந்த ஒரு பிரிவினரால் மட்டுமே படிக்கப்பட்டு வருகிறது. படிப்பது அவர்களே; படித்தாலும் அதன் மூலம் செய்ய வேண்டிய காரியங்கள் வேள்வி முதலியவைகளை அவர்களே செய்தாலும் அந்த வேள்வி செய்வதின் பலனாக, வேதம் ஓதுவதின் பலனாக, உலகிலுள்ள எல்லா ஜனங்களுக்கும் நன்மை உண்டாவதற்கே செய்யப்படுகிறது. அப்படித்தான் பலனையும் அனுபவித்துக்கொண்டே வருகிறோம்.

உலகில் ஒவ்வொரு காரியத்தை ஒவ்வொருவர் செய்து வருவதால், செய்யப்படும் காரியத்திலோ, செய்யும் மனித ரிடத்திலோ, ஏற்றத்தாழ்வோ, உயர்ந்தது, சிறியது என்றோ பாராமல், பரஸ்பரம் மரியாதையுடனும், கௌரவத் துடனும், போட்டி இல்லாமலும், ஆசை இல்லாமலும் நடந்து வந்தால், எல்லாக் காரியங்களும் நல்ல முறையிலே நடந்து வந்தன. தற்போது உள்ள சூழ்நிலையில், போட்டி மனப்பான்மையும், ஆசை மனப்பான்மையும் துவேஷ மனப் பான்மையும் வேரூன்றி இருந்தாலும், எங்கோ எந்தப் பக்கத்திலோ ஒரு பக்கத்தில் அமைதியான முறையில் ஹிந்து சமயத்தைச் சார்ந்த எந்த ஒரு வகுப்பினராய் இருந்தாலும், அவர்கள் மேற்சொன்ன போட்டி, ஆசை, துவேஷம் இவைகள் இல்லாமல், தங்கள் தங்கள் கடமைகளைச் சரிவரக் கடைப்பிடித்து வந்தால், அப்படிக் கடைபிடித்து வருவது ஒன்றே, இன்னும் சிறிதளவாவது உலக க்ஷேமத்திற்கு உதவிகரமாக இருந்து வருகிறது.

உதாரணமாக, ஒரு ஸ்தாபனம் என்றால் அந்த ஸ்தாப னத்திலுள்ள ஊழியன் வேலைக்காரன் முதல், எஜமான் முதலாளி வரை எல்லோருமே தங்கள் தங்களுக்கு ஏற்பட்ட கடமைகளைச் சரிவரச் செய்தால்தான் அந்த ஸ்தாபனம்

நல்ல முறையில் செயல்படும். அப்படி அல்லாது, அதில் ஒரு பிரிவினர் நல்ல முறையில் தன் கடமைகளைச் செய்து விட்டு, ஒரு பிரிவினர் தன் கடமைகளைச் சரிவரச் செய்யா விட்டாலும் பொதுவாக ஸ்தாபனத்திற்கு ஏற்படுவது நஷ்டமே. அதே நேரத்தில் நல்ல முறையில் தன் கடமை களைச் செய்த பிரிவினரால் செய்யப்பட்ட வேலைத்திறமை காரணமாகவே, நஷ்டம் வராமல் தடுக்கப்படுவதும் உண்டு. எஜமானன் நல்ல புத்திசாலியும், சுறுசுறுப்பு உள்ளவனுகவும் ஸ்தாபன வளர்ச்சியில் விருப்பம் உள்ளவனுகவும் இருந்தால், மற்ற சூழ்நிலை எவ்விதம் இருந்தாலும் அதையெல்லாம் சமாளித்து ஸ்தாபனத்தை முன்னுக்குக் கொண்டு வந்து விடுவான். அதுபோல்தான், உலகம் நன்மையடைய நல்ல முறையில் இருக்க உலகிலுள்ள எல்லோருமே பொதுவாக நல்ல பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்துக்கொண்டு வரவேண்டும்.

விசேஷமாக வேதம் முதலியவைகளை ஓதுபவர்கள் பொறுப்புடனும், ஆசையில்லாமலும், சிரத்தையுடனும், போட்டி போடா மனப்பான்மையுடனும், தங்கள் கடமை களைச் சரிவரச் செய்து வந்தால், அதன்மூலம் அவர்களுக்கும் நன்மை ஏற்படுவதோடுகூட உலகிற்கும் நன்மை உண்டு. யுகதர்மத்திற்கு ஏற்றவாறு சூழ்நிலைகள், காரியங்கள் நடை பெறுவதுண்டு; ஆனுலும் எல்லாக் காரியங்களையும், எல்லாக் கடமைகளையும் யுகதர்மம் என்று விட்டுவிடக்கூடாது.

இவ்விதமாக வேதங்கள் படிப்பது, அதில் சொல்லப் பட்ட வேள்விகளைச் செய்வது என்பது ஹிந்து சமயத்தைச் சேர்ந்த ஒரு பிரிவினராகிய பிராம்மண சமூகத்தினிடம் இருந்து வருகிறது. இவைகளைத்தான் தமிழில் பார்ப்பனன் ஆரியன் என்ற பெயரில் சொல்லப்படுகிறது. பார்ப்பனன் என்றால் பார்க்கிறவன் என்று பொருள். எதைப் பார்க்கிறவன்? உண்மைப் பொருளைப் பார்க்

கிறவன், அதாவது உண்மைப் பொருளைப் பார்ப்பதற்காக உள்ள நூல்களைப் படிப்பதினால் அவனுக்குப் பார்ப்பனன் என்று பெயர் வந்துவிட்டது.

உண்மையான பரம்பொருளை இரண்டுவிதமாக அறிந்து கொள்ளலாம். ஒன்று வேத, உபநிஷத்கள் மூலமாகவும் அறிந்து கொள்ளலாம். இரண்டு புராணங்கள், இதிகாசங்கள் மற்றும் ஆசார்ய புருஷர்கள் இயற்றிய நூல்கள் மூலமாகவும் அறிந்து கொள்ளலாம். வேத உபநிஷத்களின் மூலம் அறிந்து கொள்கையில், அதற்குச் சில நியமங்கள், நியதிகள் உண்டு. ஆனால், மற்ற நூல்களின் மூலம் அறிந்து கொள்வதற்கு, நியதிகள், நியமங்கள் அதிகமாகக் கிடையாது. அதேபோலத்தான் வேத, உபநிஷத்களில் உள்ள கருத்துக்களை அறிந்துகொள்வது மிகக் கடினம். மற்ற நூல்களின் கருத்துக்களை அறிந்து கொள்வது மிகச் சுலபம். மேலும் வேத, உபநிஷத்களில் பலவித கருத்துக்களும் இடம் பெறும். ஆகவே அதை அறிந்துகொள்ள முடியாத பலர், கருத்துக்கள் முரண்பாடாகவே இருப்பதாகக்கூட எண்ணிவிடக்கூடும். மற்ற நூல்களின் மூலம் அறிந்து கொள்ளும்பொழுது, இவ்விதமெல்லாம் இல்லாமல் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கும் காரணம் வேத, உபநிஷத் முதலியவைகள் ஒரு மனிதரால் இயற்றப்படாததினால் அதன் கருத்துக்களை நம்மால் அறிவது கடினம். ஸ்மிருதி முதலியவைகள், ஆசார்ய புருஷர்களால் இயற்றப்பட்ட நூல்களெல்லாம் அந்த வேத, உபநிஷத்களின் கருத்துக்களை அறிந்துகொண்டு எழுதப்பட்டிருப்பதால், சாமான்ய மனிதர்கள்கூட அறிந்துகொள்ளும்படி அவ்வளவு சுலபமாக எழுதப்பட்டிருக்கிறது.

ஆகையினால் அதிக நியமங்களுடன் கூடிய வேதங்களைப் படிப்பதற்கும், அதன் மூலமாகத் தங்களுக்கும், உலகிற்கும் கர்ம காண்ட ஞானம் முதல் தத்துவ ஞானம் வரை எல்லா விஷயங்களையும் கடைப்பிடிப்பதற்கும், பிறருக்குப் போதிப்பதற்கும் பிராம்மண சமூகமானது ஏற்படுத்தப்பட்டது.

''பிரம்ம'' என்ற சொல்லிற்குப் ''பரம்பொருள்'' என்று பெயர். அந்தப் பரம்பொருளைப் பற்றிச் சொல்லும் வேத புஸ்தகங்களுக்கும் ''பிரம்ம'' என்று பெயர். அதைப் படிப்பவர்களுக்கும் பிரம்ம என்ற சப்தத் தொடர்பினுல் பிராம்மணர் என்று பெயர் வந்தது. ஆரியர் என்பது ஒரு குறிப்பிட்ட வகுப்பாருக்குப் பெயரல்ல. அல்லது ஒரு குறிப்பிட்ட மொழிக்கும் பெயரல்ல. ''ஆரிய'' என்ற சொல்லுக்கு பூஜிக்கத் தகுந்தது, மரியாதைக்குரியது, கௌரவத்திற்குரியது, பரிசுத்தமானது என்று பொருள்.

ஒரு பிரதேசத்தைக் குறிப்பிடுகையில் அந்தப் பிரதேசம் பவித்ரமாக இருந்தால் அந்த இடத்தை ''ஆரியபூமி'' என்று சொல்வதுண்டு. சில நூல்களில் ஹிமவத் பர்வதத்திற்கும் விந்திய பர்வதத்திற்கும் இடையில் உள்ள பூமியை, பகுதியை ஆரிய பூமி என்று குறிப்பிட்டு இருக்கிறது. எங்கு மான்கள் வசிக்கின்றனவோ அந்தப் பகுதியையும் ஆரிய பூமி என்று குறிப்பிட்டு இருக்கிறது. ஹிமவத் பர்வதத்திற்கும் விந்திய பர்வதத்திற்கும் மத்தியிலுள்ள பூமியை ஆரிய பூமி என்று குறிப்பிட்டு இருப்பதால், அந்தப் பூமியில் வசிக்கும் எல்லோருமே பவித்ரமானவர்கள், புனித மானவர்கள், ஆரியர்களே! ஒரு வகுப்பாருக்கு மாத்திரம் ஆரியர் என்று பெயரில்லை. அந்த வரலாறு அறியாத சிலர், பிராம்மணர்கள் ஆரியர்கள் வடக்கிலிருந்து வந்தவர்கள் என்று கூறுகிருர்கள். ஏனென்ருல், ஆரிய பூமி இந்தியாவின் வடபாகத்தில் இருப்பதால் அந்த ஆரிய என்ற பெயருடன் கூடியவர்கள் எங்கு வசித்தாலும் அவர்களையெல்லாம் வடக்குப் பகுதியிலிருந்து வந்தவர்கள் என்று நினைத்து விடுகிருர்கள்; ஆனுல் இது சரியல்ல.

உலகம் தோன்றினது முதல் உலகத்திலுள்ள எல்லாப் பகுதிகளிலும் ஹிந்து மதத்தைச் சேர்ந்த எல்லாப் பிரிவினர் களும் வசித்து வந்தார்கள். நாளடைவில் மற்ற மத

ஆக்ரமிப்பினுலும், இயற்கைச் சூழ்நிலையினுலும், மதங்கள் மாறிப்போய்த் தற்போது இந்தியாவில் மாத்திரமே ஹிந்து சமுதாயம் இருந்து வருகிறது. இந்தியாவின் எல்லாப் பகுதி களிலும், ஹிந்து சமயத்தைச் சார்ந்த எல்லா வகுப்பினரும் இருப்பதினுல் இவர்கள் எங்கிருந்தோ வந்தார்கள் என்று சொல்வது சரியல்ல.

ஹிந்து சமயமானது உலகம் முழுவதும் பரவியிருந்தது என்பதற்கு நிறையச் சான்றுகள் இருக்கின்றன. மஹாபாரத யுத்த காலத்தில் அநேக நாடுகளிலிருந்து போருக்கு வந்தவர் களைப்பற்றிக் குறிப்பிடுகையில், தற்போது வழங்கிவரும் பெயர்களில் அந்த நாடுகள் இல்லாவிட்டாலும் அப்பொழு துள்ள நாடுகளின் பெயர்கள் இப்பொழுது இல்லாவிட் டாலும், அவர்கள் குறிப்பிடும் நாடுகளின் பெயர்களிலிருந்து ஒருவாறு அந்த தேசங்களின் பெயர்களை அறிந்துகொள் கிறேம். அதேபோல் ராமாயண வரலாறுகளிலிருந்து பல பகுதிகளை நாம் அது ஹிந்து சமயத்தைச் சேர்ந்தது என்று யூகித்து அறிந்துகொள்ள முடிகிறது.

இந்தோனேஷியா, கம்போடியா, தாய்லாந்து, லாவோஸ், ஜப்பான், சிங்கப்பூர், இலங்கை போன்ற அநேக நாடுகளில் இராமாயணம், மஹாபாரதம் மற்றும் விநாயகர் முதல் ஆஞ்சநேயர் வரையிலுள்ள ஹிந்து சமய அநேக கடவுள் மூர்த்திகளும் சிற்சில கோவில்கள் மூலமாகவும், நடனம் நாடகங்கள் மூலமாகவும் வழிபட்டும், நடத்தப்பட்டும் வருகின்றன. வேள்விகளில் உபயோகப் படுத்தப்பட்ட அநேக சாமான்கள் பூமியிலிருந்து கிடைக்கின்றன.

இதேபோல் ஸம்ஸ்கிருத மொழியும் உலகெங்கும் பரவி யிருந்தது என்பதற்கு அடையாளங்கள் நிறைய இருக் கின்றன. அப்படி அடையாளங்கள் காணப்பட்டாலும் தேவநாகரி லிபியில் ஸம்ஸ்கிருத எழுத்துக்கள் காணப்பட

வில்லை. அநேகமாக கிரந்த எழுத்தில் அல்லது பழங்கால ''பிராம்மி'' முதலிய எழுத்துக்களில்தான் ஸம்ஸ்கிருத எழுத்துக்கள் நிறையக் கிடைக்கின்றன. ஆனால் ஸம்ஸ்கிருத பாஷை, சொல்லில், பேச்சில், பல நாடுகளில் இன்றும் புழக்கத்தில் இருந்து வருகின்றது. சிற்சில நாடுகளில் பேசும் மொழி வேறாக இருந்தாலும் அதில் ஸம்ஸ்கிருதச் சொற்கள் நிறைய இடம் பெற்றிருக்கின்றன. உதாரணமாக பர்மா என்பது பிர்ம்மா என்ற சொல்லின் திரிபு. இந்தோனேஷியாவில் ''ஜாக்கிரதா'' என்ற சொல் விழிப்பு என்ற பொருள் படக்கூடிய ஸம்ஸ்கிருதச் சொல்லான ''ஜாக்கிரத்'' என்ற சொல்லின் திரிபே. ரஷ்யா என்ற சொல் ரிஷிகள் வாசம் செய்த ஸ்தானம். ரஷ்யா, ரிஷி என்ற சொல்லின் திரிபே. சீனா, ரஷ்யா இரண்டும் ஹிமாசலப் பிரதேசத்தின் மற்றொரு பகுதிகளே. இமய மலையின் தென் பகுதி இந்தியா என்றால் வட பகுதி சீனா. ரஷ்யாவே இந்தோனேஷியாவிலிருந்து நம் நாட்டிற்கு வரும் விமானத்திற்கு ''கருட்'' என்று பெயர். இந்தோனேஷியா போன்ற நாடுகளில் தெருவுக்கு, ஊருக்கு, மனிதனுக்கு உள்ள பெயர்களிலெல்லாம் ஸம்ஸ்கிருதச் சொற்கள் கலந்தே இருக்கும். சமீப காலத்துக்கு முன்பாகக்கூட ''சுகூர்னோ'' என்ற அதிபர் இருந்தார். ''சுகார்த்தோ'' என்ற அதிபர் இப்போதும் இருக்கிறார். அநேகமாக, இந்தோனேஷியாவில் பெரும் பகுதி மாற்று மதங்களால் நிறைந்து இருந்தாலும், பெயர்கள் பெரும் பாலும் இன்றும் ஸம்ஸ்கிருத அடிப்படையிலேயே நிறைய இருக்கின்றன. ஆகவே உலகம் முழுவதிலும் ஒரு நாள் ஸம்ஸ்கிருத மொழி, ஹிந்துக் கலாச்சாரம், ஹிந்துப் பண்பாடு நிறைய இருந்தன என்பதற்கு நிறையச் சான்றுகள் இன்றும் இருக்கின்றன. மேலும் வேள்விகள் செய்த அடையாளங்களாக, வேள்விகளுக்கு உபயோகப்படுத்தப்பட்ட சாமான்கள் பூமியிலிருந்து நிறையக் கிடைக்கின்றன. அதேபோல் உருவமுள்ள இறைவனின் வடிவங்களான விக்ரகங்களும் பூமியிலிருந்து நிறையக் கிடைக்கின்றன. இவையெல்லாம் உலகெங்கிலும் நமது மதமும், நமது கலாச்சாரமும்

ஸம்ஸ்கிருத மொழியும் பரவியிருந்தன என்பதற்குக் கண்கூடான ஆதாரங்களே. ஆகவே நமது மதம், நமது மொழி இது இரண்டும் ஓரிடத்திலிருந்து வந்ததாகக் கூறுவது வெறும் அபத்தமே.

ஸம்ஸ்கிருதத்தை ஆரிய மொழியென்று கூறுவார்கள். ஆனல் அது ஒரு வகுப்பாருடைய மொழியல்ல. ஆரியர் என்று குறிப்பிடுவதும் ஒரு வகுப்பாரைக் குறிப்பதல்ல. ஆரிய மொழியென்பதும் ஒரு வகுப்பாருடைய மொழியைக் குறிப்பதல்ல. ஸம்ஸ்கிருதத்தின் மூலம் பவித்ரமான இறைவனுடைய நாம ஜபங்களை, புராணங்களை, வேதங்களை, நாம் படிப்பதினுல் அதற்கு ஆரிய மொழியென்று பெயர் வந்திருக்கிறது. ஆரிய என்ற சொல்லுக்கு முன்பே சொல்லி விட்டோம், புனிதமானது, பவித்திரமானது, பூஜிக்க வேண்டியது என்றெல்லாம். ஆகவே ஆரிய என்ற சொல்லானது ஒரு வகுப்பையோ, ஒரு மொழியையோ சொல்வது என்பது சரியல்ல.

ஹிந்து சமயத்திலுள்ள ஒவ்வொரு பிரிவினர்களுக்கும் ஒவ்வொரு காரியத்தை வகுத்துக் கொடுத்ததினுல் வேதம் ஓதுதல் போன்ற காரியங்கள் பிராம்மணர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றவர்கள் எல்லோரும் தத்துவங்களை அறிந்து கொள்வதற்கு ஒரு தடையுமில்லை. ஆனுல் அறிந்தவர்கள் மூலமாக அறிந்து கொள்ளலாம். அல்லது புராணம், இதிகாசங்கள் மூலமாக அறியலாம். ஏனென்றுல், சாதாரணமாக எல்லோரும் வேதம் படிப்பதற்கு ஏற்பட்டதல்ல. அதைப் படித்து, அதன் பொருளை அறிந்து கொண்டு, அதன் பிரகாரம் கடைப்பிடிக்க வேண்டியவரை பொறுப்பு இருக்கிறது.

வேதத்தைப் படித்ததினுல் மாத்திரம் புண்யம் ஏற்படுகிறதென்றுல், எல்லோரையுமே படிக்கச் சொல்லலாம். படிப்பதினுல் எத்தனை புண்ணியம் ஏற்படு

கிறதோ அதைக் காட்டிலும் அதில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களை கடைப்பிடிப்பதன் மூலம் பல மடங்கு பலன் ஏற்படுகிறது. மேலும் வேதம் இறைவனுடைய ஸ்தோத்திர மாக மாத்திரம் இருந்தால் அதைப் படிப்பதன் மூலம் புண்ணியம் ஏற்படும். ஆனால் வேத நூல்களில் நாம் செய்ய வேண்டிய கடமைகளையும் வலியுறுத்தி இருப்பதினால், அந்தக் கடமைகளை நாம் செய்ய வேண்டி இருக்கிறது. அப்படிச் செய்ய வேண்டியது என்று வரும்பொழுது, ஹிந்து சமயத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு காரியம் என்று பிரித்துக் கொடுத்திருப்பதினால் வேதங்களைப் படிப்பது முதலிய காரியங்கள், பிராம்மணர்களிடம் தொன்றுதொட்டு வந்து கொண்டிருக்கிறது.

வேதத்தையும், வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களையும கடைப்பிடிக்க வேண்டியவர்கள் மிகவும் ஆசார மாகவும், புனிதமாகவும் நியம நிஷ்டையுடனும் இருக்க வேண்டியது அவசியமாகிறது. இதற்காகத்தான் கொஞ்ச காலத்திற்கு முன்புவரை அநேகமாக பிராம்மணர்களெல்லாம், நதி தீரங்களிலும், ஜல வசதியுள்ள குளங்கள் பகுதிகளிலும், கிராமங்களிலும் இருந்து வந்தார்கள். இந்த வரலாறு அறியாத பலர், ஆரியர்கள் முதலில் ஸிந்து நதி தீரத்தில் வசித்து வந்தார்கள் என்று எழுதுகிறார்கள். எங்கெல்லாம் ஜலவசதி இருந்ததோ அங்கெல்லாமே ஆரியர்கள் இருந்து வந்திருக்கிறார்கள். ஆனால் வரலாறு எழுதுகிற ஆசிரியர்கள், ஆரியர்களை முதன் முதலில் ஸிந்து நதி தீரத்தில் வந்து பார்த்ததால், அவர்கள் ஆரியர்கள், ஸிந்துநதி தீரத்திலிருந்து வந்தவர்கள் என்று எழுதுகிறார்கள் போலும்.

வேதம் படிப்பது, வேள்விகளைச் செய்வது முதலிய கடமைகள் பிராம்மணர்களுக்கு விதிக்கப்பட்டிருந்தாலும் அதனுடைய பலனானது அவர்களுக்குக் கிடைப்பதோடுகூட நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் கிடைக்கும்படி உள்ளது.

உதாரணமாக, ஒரு குயவன் மண்பாண்டம் செய்வது அவன் கடமையாக இருந்தாலும், அந்த மண்பாண்டமானது அவனுக்கு உதவுவதோடு உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் உபயோகப்படும்படியாக இருப்பதுபோல, ஹிந்து சமயத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கடமை விதிக்கப்பட்டிருந்தாலும், அவை அவரவர்களுடைய மேன்மைக்கும் உலகிலுள்ள எல்லோருக்கும் பலன் அளிப்பவை யாவுமே அமைந்து இருக்கின்றன.

குயவன் போன்றவரின் கடமைகள் பிறருக்கு உதவியாக இருப்பது ப்ரத்யக்ஷமாக தென்படுகின்றன. அதே சமயம் பிராம்மணர்கள் வேதங்கள் படிப்பது, வேள்விகள் செய்வதின் பலன், சில ப்ரத்யக்ஷமாகத் தெரியலாம். பல அருள் சக்தி மூலமாக, மறைமுகமாகப் பலன் அளிக்கலாம். ஆகவே வேதம் ஓதுவது, வேள்வியைச் செய்வது முதலியவைகள் புனிதமான, பவித்திரமான கடமையானதால், அதைக் கடைப்பிடிப்பவர்கள் ஆரியர் என்ற சொல்லினுல் அழைக்கப்பட்டிருக்கலாம். ஆரிய என்ற சொல் ஹிந்து மதத்தில் இருக்கக்கூடிய ஒவ்வொரு வர்க்கத்தினருக்கும் அவரவர் கடமையும் புனிதமாகப் பயன்படுத்தப்படுவதால் ஏற்படுகிறது.

உலகம் தோன்றின காலம் முதல் ஹிந்து சமயத்திலுள்ள எல்லா வர்க்கத்தினரும் இருந்துகொண்டேதான் வருகிறுர்கள். மேலும் வேதங்களில், எல்லாப் பிராணிகளும், எல்லா வர்க்கத்தைச் சேர்ந்தவர்களும் படைக்கப்பட்ட முறைகளைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகவே எங்கிருந்தோ ஒரு காலத்தில் வந்தார்கள் என்று சொல்ல வேண்டிய அவசியமில்லை. பூர்வ குடிகள் யாரோ இருந்தார்கள் என்றெல்லாம் கூற வேண்டிய அவசியமுமில்லை. நவீன வரலாற்று ஆசிரியர்கள் இருண்ட காலம், பழைய கற்காலம், புதிய கற்காலம், உலோக காலம், வேத காலம், உபநிஷத் காலம், புராண காலம் என்றெல்லாம்

எந்தவித ஆதாரமுமில்லாமல் தங்களுக்குத் தோன்றிய பிரகாரமெல்லாம் யூகத்தின் மூலமாகவும், கிடைக்கும் தொல்பொருள்களின் மூலமாகவும் வரலாறு எழுது கிறார்கள்.

சிறிது காலத்திற்கு முன்பு புதை பொருள் இலாகா வினால் கண்டுபிடிக்கப்பட்ட "மொகஞ்சதாரோ, ஹரப்பா" முதலிய இடிந்த நகரமானது 5,000, 10,000 ஆண்டுகளுக்கு முன்பாகவே இருக்கக்கூடியது என்று சொல்லப்படுகிறது. 5,000, 10,000 ஆண்டுகளாக இதே நாகரீகம், இதே கட்டடம் முதலியவைகள் இருக்கிறதென்றால், அதற்கு எத்தனை காலம் முன்பிருந்து இவைகள் வந்திருந்தால் 10,000 ஆண்டுகளாக இதே நாகரீகம் இருந்திருக்கும். மேலும், வேதம், ஸ்மிருதி, இராமாயணம், மஹாபாரதம் போன்ற நூல்களைப் படித்துப் பார்க்கையில், அந்த நூல்களின் முறைகளும் பாஷா முறைகளும், அதைச் சொல்லும் முறையும், அதில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களும் சரித்திர ஆசிரியர் பிரகாரம், சில 1,000 ஆண்டுகளுக்கு முன்பே அவ்வளவு தெளிவாகச் சொல்லப் பட்டிருக்கிறதென்றால், அதற்கு எத்தனை ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பு இருந்து அந்த பாஷை, அந்தச் சொல் வளர்ச்சி, அதில் சொல்லப்பட்டிருக்கும் தத்துவங்கள் இருந்தே வந்திருக்கும்.

இத்தனை பாஷைகளையும், கிரந்தங்களையும் தத்துவங் களையும் படித்தவர்கள், அறிவிற் சிறந்த மனிதர்களாகத் தான் இருக்க வேண்டி வரும். ஆகவே பல ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பிருந்து அறிவிற் சிறந்தவர்கள் நிறையப் பேர் இருந்திருக்கிறார்கள். அப்படியிருக்கையில் வரலாற்று ஆசிரி யர்கள் கூறுவதுபோல், இருட்டுக் காலம் போன்ற காலங் களெல்லாம் எப்பொழுதிருந்தது என்றே தெரியவில்லை. வரலாற்று ஆசிரியர்கள் எந்த வேதங்களை, புராணங்களை, இதிகாசங்களை எடுத்துக்கொண்டு காலக்கணக்கை எடுத்துக்

கொள்கிறார்களோ அதே வேத, புராண, இதிகாச புஸ்தகங்களில் அந்த நூல்களிலுள்ள தத்துவங்களெல்லாம் காலக் கணக்கிற்கு அப்பாற்பட்டவையாகவே சொல்லப் பட்டிருக்கின்றன.

பொதுவாக நாலு யுகங்கள். கிருத யுகம், த்ரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம்—நாலு லட்சம் சில்லறை வருஷங்கள். அதைப்போல் இரண்டு மடங்கு, நாலுமடங்கு, எட்டு மடங்கு வருஷங்கள் கொண்டவை. முறையே, துவாபர யுகம், த்ரேதா யுகம், கிருத யுகம், கலியுகம். இது தவிர இந்த நான்கு யுகங்களும் மாறி மாறி வந்துகொண்டே இருக்கின்றன. ஆகவே, உலகம் தோன்றியதற்குக் காலத்தைக் குறிப்பிடுவது மிகக் கடினம். அப்படிக் காலத்தைக் குறிப்பிடத் தொடங்கினாலும், இருட்டுக்காலம் போன்ற காலங்களெல்லாம் ஒன்றுமே கிடையாது. ஏனென்றால், உலகம் தோன்றின காலம் முதல் சமஸ்தான பிராணிகளும் ஸம்ஸ்தமான அடிப்படைத் தத்துவங்களும் இருந்து கொண்டேதான் வந்துகொண்டிருக்கின்றன. ஆனால் அதைக் கடைப்பிடிப்பவர்களிலே அதிகம்பேர், குறைந்தபேர் என்ற கணக்கு உண்டு. அப்படிப் பார்த்தாலும், முன்பே அதிகம் பேர் தத்துவங்களை அனுபவித்தவர்களும், கடைப்பிடித்தவர்களும் இருந்திருக்கிறார்கள். இப்பொழுது ஜனத் தொகையில் அதிகம் காணப்பினும் தத்துவங்களைக் கடைப் பிடிப்பவர்களும், அனுபவிப்பவர்களும் கொஞ்சம் பேர்தான். ஆகவே ஜனத்தொகையையும், நாகரீகம் என்ற பெயரில் இருக்கக்கூடிய சாப்பாடு, உடை உடுத்தல், வீடு கட்டிக் கொள்ளுதல் முதலியவைகளை மாத்திரம் வைத்துக்கொண்டு இருட்டுக் காலங்களெல்லாம் அகன்றுவிட்டது என்று கூறுவது சரியல்ல. காலத்திலே இருட்டுக்காலம் என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. ஒளி இல்லாமல் இருக்கும் போதுதான் இருட்டு தென்படுகிறது. அதுபோல், வாழ்க்கையிலே, அறிவிலே, புத்தியிலே, நல்ல தத்துவங்களும் பகவானுடைய, பரமாத்மாவினுடைய உண்மை சொரூபம்

விளங்கும்பொழுது, அவன் ஞான ஒளியாய்ப் பிரகாசிக்கிறன். ஆகாசங்களில் ஈடுபட்டு வாழ்க்கையில் இருக்கும் பொழுது, அஞ்ஞான இருளில் அடைபட்டுக் கிடக்கிறன். இதைத் தவிர, இருட்டுக் காலமென்று தனியாக ஒன்று கிடையவே கிடையாது.

ஜனசங்கியை குறைந்திருக்கும்பொழுதும், ஆன்மீக வாழ்க்கையில் மனிதன் ஈடுபட்டு இருக்கும்பொழுதும், வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை அவன் குறைத்துக்கொள்கிறன். அதைப் பார்த்து அவன் நாகரீக மற்றவன் என்று கூறுவது சரியல்ல. நகரத்தில் வசதியின் மத்தியில், உண்டு உடுத்தி வாழ்பவன் நாகரீகன், கிராமிய சூழ்நிலையில் தேவைகளைக் குறைத்துக்கொண்டு, ஆடம்பர மற்ற முறையில் உணவு, உடை, இருப்பிடம் இவைகளைத் தயார் செய்து கொள்ளும் பொழுது, நாகரீகமற்றவன் என்று அவனைக் குறிப்பிடுகிறேம். இந்த நாகரீகம், நாகரீக மின்மை இவைகள் உலகம் தோன்றின காலம் முதல் இன்று வரை இருந்து கொண்டேதான் வருகின்றன. அதாவது நகரச் சூழ்நிலையும், கிராமச் சூழ்நிலையும் உலகம் படைக்கப் பட்ட நாள் முதற்கொண்டு இருந்து கொண்டேதான் இருக்கிறது. அதற்கென்று தனி கால வரையறை கிடையாது. இப்பொழுதும் இந்தக் காலத்திலும் கூடக் கிராமச் சூழ்நிலையில், செங்கற்களையும், இலைகளையும் பரப்பி வீடுகள் கட்டிக்கொள்ளும் பழக்கம் இருக்கிறது. நகரங்களில் நாகரீகப் பாணியில் வீடு கட்டிக் கொள்ளும் பழக்கமும் இருந்து வருகிறது.

வேள்வி போன்ற காரியங்கள் நடைபெறும்பொழுது, அது நகரங்களில் நடந்தாலும்கூட, அங்கு நெருப்பு போன்றவைகள் சுலபமாக வரவழைத்துக்கொள்ள வசதி இருந்தும்கூட, மரக்கட்டையை உறைத்து அதன் மூலம் நெருப்பை வரவழைத்து அந்த நெருப்பிலேயே வேள்வி முதலியவைகள் செய்வது இன்றும் கண்கூடான காட்சியாக

இருக்கிறது. கருங்கற்களை உறைத்து நெருப்பு வரவழைப்பது இன்று விளையாட்டுக்களில் ஒன்ருக இருந்து வருகிறது. ஆகவே இதற்கெல்லாம் பழைய கற்காலம், புதிய கற்காலம் என்று கற்பித்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

இவ்வளவு நாகரீகம் முதிர்ந்த காலத்திலும், வரலாற்று ஆசிரியர்கள் சொல்வதுபோல் பழைய கற்காலம் புதிய கற் காலம், உலோக காலம் முதலிய காலங்களில் மனிதனுடைய வரலாற்றைப்பற்றி எவ்விதம் எழுதியிருக்கிருர்களோ, அத்தகைய மனிதர்கள் இன்றும் மலைப்பகுதிகளிலும், நதிப் பகுதிகளிலும் வசித்து வருகிருர்கள். ஆகவே பழைய காலம் மறைந்துவிட்டது, புதிய காலம் தோன்றிவிட்டது என்ப தெல்லாம் சரியல்ல. இதேபோலத்தான் வேத காலம், உபநிஷத் காலம், என்று சொல்வதும் சரியல்ல. ஏனென்ருல் வேதம் உலகம் தோன்றின காலம் முதல் அனுதியாய் வந்துகொண்டே இருக்கிறது. ஆகவே அது தோன்றின காலம் என்று தனியாகக் குறிப்பிட முடியாது. உபநிஷத் வேதத்தின் ஒரு பாகமாகையால், உபநிஷத் காலம் என்று அதற்கும் தனியாக ஒரு காலம் கிடையாது. இதிகாசங்கள், புராணங்கள் வேதவியாஸரால் எழுதப்பட்டாலும், தன் சொந்த புத்தி சக்திக்கு ஏற்றவாறு எழுதாமல், ஞான சக்தியால் நடந்த கால நிகழ்ச்சிகளையும், நடக்கப்போகும் கால நிகழ்ச்சிகளையும் எழுதினுரே தவிர, அங்கு அவருடைய சொந்தக் கற்பனைக்கே வேலையில்லை. ஆகவே அவைகளும் எழுதப்பட்டது என்று சொல்வது, அதற்கு இவர்கள் கூறுவது போல் ஒரு காலத்தைக் குறிப்பிடுவதும் கடினம்.

துவாபரயுகக் கடைசியில், வேத வியாஸரால் வேத கிளைகள் பிரிக்கப்பட்டன. புராணங்கள், இதிகாசங்கள் எழுதப்பட்டன. இதைத்தவிர, வேதகாலம், உபநிஷத் காலம், புராணகாலம், இதிகாச காலம் என்று வளர்ச்சியின் மூலம் காலத்தைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது.

உலகத்தின் தோற்றத்தைப்பற்றிக் குறிப்பிடுகையில், ஜீவன் ஓரறிவு முதல் உற்பத்தியாகி அதே பரிணமமாக ஈரறிவு, மூன்றறிவு, நாலறிவு, ஐயறிவுப் பிராணிகளாகத் தோன்றித் தோன்றிக் கடைசியாக ஆறறிவு படைத்த மானிடனாக வந்திருக்கிறது என்று கூறுகிறார்கள். இதையே ''Development Theory'' என்றும் கூறுகிறார்கள். இதன் பிரகாரம் ஒரு பிறவியிலிருந்து மற்றொரு பிறவி வருவதற்கு காரணம், கர்மா, வினை, புண்ய, பாவம், முதலியவை களாகாது.

நமது ஹிந்து மத சித்தாந்தப் பிரகாரம், முதற் பிறவி வந்ததற்கும் காரணம் சொல்ல முடியாது. அத்துடன் எந்தப் பிறவிக்கும், முதற் பிறவிக்கும் காரணம் கர்மாவே, வினையே, புண்ய பாவமே. பரிணமவாதத்தின் பிரகாரம், மனிதப் பிறவிக்குப் பிறகு என்ன பிறவி எடுக்க வேண்டும் என்பதற்குப் பதிலோ, அதற்காக எந்தவிதமான வேலை யாவது செய்ய வேண்டுமோ, கர்மாமாவது செய்ய வேண்டுமோ என்ற விஷயமோ சொல்லப்படவில்லை. மேலும் எந்தப் பிறவியும் தன் வாழ்நாட்களின் மத்தியி லேயே இறந்துபோவதற்கும், துன்பங்கள் வருவதற்கும், கவலைகள் ஏற்படுவதற்கும் பரிணமவாதத்தில் காரணம் சொல்லப்படவில்லை. ஒன்றன்பின் ஒன்றாக காலத்திற்கேற்ற வாறு பரிணமித்து வருகிறது என்று சொல்லுகிறார்களே தவிர கர்ம சித்தாந்தத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.

ஹிந்து மதப் பிரகாரம் வேதங்கள் நம்முடைய வாழ்க் கைக்குப் பிரமாணமான நூல்கள். இந்த வேதங்களின் கருத்துக்களை ஸ்மிருதிகள் தெளிவுபடுத்துகின்றன. அந்த ஸ்மிருதிகளில் பிறப்புக்குக் காரணமாயுள்ள காரியம் முதல் இறக்கும்வரை, என்னென்ன காரியங்கள் ஸம்ஸ்காரங்கள் என்ற பெயரில் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டிருக் கின்றன. இந்த ஸம்ஸ்கார காரியங்கள் செய்வதன் மூலம்,

உரியவாறு பிறக்கப்போகும் ஜீவனும், பிறந்த ஜீவனும், வாழ்ந்து கொண்டிருக்கும் மனித ஜீவனும், தேகத்தை விட்ட ஜீவனும் புனிதத்தைப் பெறுகின்றனர்.

மனித வாழ்விலே எந்த நல்ல, கெட்ட காரியம் மனதாலும், பொருளாலும், செய்கையாலும் செய்தாலும், அவைகளில் உடனே பலன் வரக்கூடியவையும் உண்டு. பிற்காலத்தில் பலன் வரக்கூடியவையும் உண்டு. இதைத்தான் புண்யம், பாவம் என்கிறார்கள். இதனுடைய பலன்தான் நம்முடைய வாழ்க்கையில் இன்பம், துன்பமென்று அமைகிறது. மனிதன் ஒருவனைத் தவிர மற்றப் பிராணிகள் செய்யக்கூடிய எந்தக் காரியத்திற்கும் புண்யம், பாவம் இரண்டும் பிரதிபலனாக வராது. ஏனென்றால் விசேஷ பகுத்தறிவு அவைகளுக்குக் கிடையாது. ஆகவே விசேஷ பகுத்தறிவோடு கூடிய மனிதன் செய்யும் ஒவ்வொரு செய்கைக்கும்தான் புண்ணிய, பாவ பலன் உண்டு.

மனிதப் பிறவி உள்பட பிராணிகள் பிறவி வரை எல்லாப் பிறவிக்கும் காரணம், மனிதப் பிறவியில் நாம் செய்யும் புண்ய பாவங்களே என்று நமது ஹிந்துமத நூல் கூறுகிறது. தவிர பரிணாமவாதப் பிரகாரம் ஓரறிவு ஈரறிவு மூலமாக மனிதப் பிறவி வருகிறதென்று கூறாமல் மனிதப் பிறவியின் மூலமாகவே எல்லாப் பிறவியும் வருகிறது என்றும் கூறுகிறது நமது மதநூல். இந்த முறையில் தான் ஹிந்து மதத்திலுள்ள ஒவ்வொரு வகுப்பினருக்கும், ஒவ்வொரு மனிதனுக்கும் கர்மாக்கள், கடமைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

இந்தக் கர்மாக்கள், கடமைகள் செய்வதிலிருந்து தவறும்போதுதான், பாவங்கள் சேருகின்றன. அந்தப் பாவங்களின் பலனாக, துக்கங்கள் முதலியவைகள் ஏற்படுகின்றன. ஆனால் அதே கடமைகளையும், கர்மாக்களையும்

சரியான முறையில் செய்யும்பொழுது புண்ய லோகமும், அந்தப் புண்யத்தின் பலஞக சந்தோஷமும் கிடைக்கிறது. ஆனல் பரிணமவாதத்தின் பிரகாரம், ஒரு பொருள் அழிந்து தான் மறுபொருள் பரிணமிக்கிறது. பால் தயிராவது போல, மண் குடமாவது போல, பரிணமவாதத்தில், காரியமாக வரும்பொழுது மூலப் பொருள்களுக்குக் குறைவோ, இல்லாமையோ, அல்லது மாறுதலோ ஏற்படும். ஆனல் கர்ம சித்தாந்தப் பிரகாரம், மூலப் பொருளானது, அவித்தையே, அஞ்ஞானமே, அறியாமையே!

கர்மாக்களையும், கடமைகளையும் ஒழுங்காகச் செய்வதன் மூலம், அதன் பலனை இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதன் மூலம், நம்முடைய மனத்தில் சித்த சுத்தி பெற்று அதன் மூலம் ஞானத்தை அடைந்து, அதாவது உண்மையை அறிந்து கொண்டு, அஞ்ஞானத்தையும், அறியாமையையும், அதன் காரியமான கர்மாக்களையும், கர்மாக்களின் பலனை இன்ப, துன்பங்களையும் அழித்து ஆனந்தமாய் இருக்க முடியும் என்று கூறுகிறது நமது ஹிந்து மத நூல்.

அழுக்கான பாத்திரத்தை மண்ணைக் கொண்டு தேய்ப்பதன் மூலம் அந்த பாத்திரம் சுத்தமாவதுபோல, அறியாமை, அஞ்ஞானம், அதனல் ஏற்படக்கூடிய அதன் பலன் எல்லாவற்றையுமே யதோக்த கர்மானுஷ்டானங்களாலும், கடமைகளாலும் போக்கடித்துக்கொண்டு அதன் மூலம் ஞானத்தைப் பெற வேண்டும். ஞானத்தைப் பெற்றதின் மூலம் ஞானத்திற்கு விரோதமான, எதிரிடையான அஞ்ஞானம், அதனுடைய காரியங்கள் எல்லாம் தாமே அழிந்துபோய்விடும். ஆகவே எல்லாவற்றிற்கும் காரணம் அஞ்ஞானம்.

அந்த அஞ்ஞானம் அழிவதற்குக் காரணம் ஞானம். அஞ்ஞானம் அழிவதற்காகவும், ஞானம் பெறுவதற்காகவும் தான், இத்தனை கர்மா, இத்தனை கடமைகள், இத்தனை

சுக துக்கங்கள் எல்லாமுமே. ஆகவே மனிதப் பிறப்பானது சரியான முறையில் முடிவடைய வேண்டுமானால், அதற்குக் காரணம் நம்முடைய கடமையே, நமக்கு ஏற்பட்ட கர்மாக்களே! கர்மாக்களின் மூலம் சித்த சுத்தி பெற்று ஞானத்தை அடைவதே மானிட வாழ்வின் குறிக்கோள்.

சிலர், இன்றுள்ள நிலைமையிலே, பக்தியினாலேயே எல்லாவற்றையும் அடைந்துவிட முடியும், குறிப்பாக மனிதப் பிறப்பின் பலனையுமே அடைந்துவிட முடியும் என்று சொல்லிக்கொண்டு இன்று மிஞ்சி நிற்பது பக்தி மாத்திரமே என்கின்றனர். ஹிந்துமத சித்தாந்த பிரகாரம் கடமைகள் செய்யும்பொழுது அதிலேயே கடவுள் பக்தியும் கலந்தே வருகிறது. எந்த ஒரு கர்மாவைச் செய்தாலும், அந்தக் கர்மாவை ஆரம்பிக்கும்பொழுது, ''பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம்'' என்றவாறு ஆரம்பிக்கப்படுகிறது. முடிவில் ''ஸ்ரீ கிருஷ்ணார்ப்பண மஸ்து'' என்றவாறு முடிக்கப் படுகிறது.

சாமான்யக் கடமையைச் செய்யும்பொழுது, தந்தையி னிடத்தும் கடவுளை நினைத்துக் கடமைகளைச் செய், தாயி னிடத்தும் கடவுளை நினைத்துக் கடமைகளைச் செய், குருவி னிடத்தும் கடவுளை நினைத்துக் கடமைகளைச் செய், பதியி னிடத்தும் கடவுளை நினைத்துக் கடமைகளைச் செய், அவ்வண்ணமே ஸ்தல விருக்ஷங்களிலும், கோவில்களிலும் ஈஸ்வர பாவனையை வரவழைத்துக்கொண்டு அதாவது ப்ரதக்ஷிணம் முதலிய வழிபாடுகள் செய்தல் போன்ற அநேக காரியங்கள், கடமைகள் தெய்வ நினைப்புடனேயே செய்யும்படி சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் தெய்வ வழிபாட்டிற்காகக் காலமும், காலையும், மாலையுமே சொல்லப்பட்டிருக்கிறது. தூங்கி எழுந்திருக்கும்பொழுதும், தூங்கப் போகும் போதும் மேலும் கடவுள் நினைப்புடன் இருக்க வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகவே தனியாக பக்தி, பஜனை என்பவை இருப்பினும் நம்முடைய கடமைகளிடையே பக்தி செய்வதற்கு நிறைய வாய்ப்புகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

நமது மதப் பிரகாரம் நாலு யுகங்கள். அவைகளில் துவாபரயுகத்திலே ஸ்ரீ கிருஷ்ணன் அவதார காலத்திலிருந்து நமது ஹிந்துமத வரலாற்றைச் சிறிது நோக்குவோம். ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அவதாரம் செய்வதற்கு முன்பு ஆங்காங்கே மஹரிஷிகள், வேள்விகள், யாகங்கள் செய்து வந்ததாகவே புராணங்கள் கூறுகின்றன. அப்பொழுதே அசுர சக்தியுள்ள, அதாவது கெட்ட சிந்தனையுள்ள சிலர், வேள்விகளையும் யாகங்களையும் சரிவர நடக்கவிடாமல் தடுத்தும் அழித்தும் வந்திருக்கிறார்கள். மேலும் தேவ லோகத்திலுள்ள தேவதைகளையெல்லாம், இந்த அசுர சக்தியுள்ள சிலர், ஹிம்ஸைப்படுத்தியும் வந்திருக்கிறார்கள். இந்த தொல்லையைச் சகிக்காத தேவதைகளெல்லாம், உலகம் படைக்கும் பிரம்மாவைச் சரண் அடைந்து, தர்மங்கள் அழியத் தொடங்கிவிட்டன, அசுர சக்திகள் மேலோங்கி இருக்கின்றன என்று முறையிட, அவர் அவர்களை அழைத்துக்கொண்டு மஹாவிஷ்ணுவிடம் போய் விவரத்தைக் கூறி, பகவான் அவர்கள் பூலோகத்தில் அவதாரம் செய்ய வேண்டும், அதன் மூலம் பூலோகத்தில் தர்மத்தை நிலைநாட்ட வேண்டும், பௌதிக பலத்தை மாத்திரம் நம்பியிருக்கிறவர்களையும் தர்மத்துக்கு விரோதமுள்ளவர்களையும், அதர்மத்தையும் அதர்மத்திற்கு ஊக்கமூட்டுபவர்களையும் அழித்து, எங்களைக் காத்து, அனுக்ரஹிக்க வேண்டுமென்று விக்ஞாபனம் செய்துகொண்டனர். அந்த விஷ்ணுவின் அவதாரமாக ஸ்ரீ கிருஷ்ணன் அவதாரம் நடைபெறுகிறது.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவதாரம் ஏற்பட்டவுடன், அசுர சக்தியுள்ளவர்கள் அழிக்கப்படுகிறார்கள். ரிஷிகள் முதலியவர்கள் யாகம், வேள்வி முதலியவைகள் செய்து

வருகிறார்கள். தேவதை முதலியவர்கள் பிரசன்னமாக இருந்து வருகிறார்கள். இந்த நிலையிலே அபூர்வ செய்கைகள் செய்யும் ஸ்ரீ கிருஷ்ணபிரானின் லீலைகளைக் கண்டும், கேட்டும் அவரிடத்திலே எல்லோரும் மனத்தைப் பறிகொடுத்து, பக்தியின் உச்சஸ்தானத்திற்கு, உயர்ந்த நிலைக்கு வருகிறார்கள். அதாவது வீடு, வாசல், குழந்தை, குட்டி, பொருள் இவைகளின் மேலுள்ள அபிமானத்தை யெல்லாம் விட்டு விட்டு, கிருஷ்ணனே எல்லாமும், அந்தக் கிருஷ்ணனே வேண்டும் என்ற நினைவில் பரிபூர்ண தியாகத்துடன் உயர்ந்த பக்தியில் இருந்து வந்தனர். அப்பொழுதே மஹரிஷிகள் கடமையே பெரிதென்று யாகங்கள் செய்வதிலேயே தீவிரமாக இருந்து வந்தார்கள். கடவுள் நினைப்பை அவர்கள் கடமையிலே காணவில்லை. கடமையோடுகூட கடவுள் நினைப்பையும் சேர்த்து நினைக்கும்போது, அது ஆன்மீக வழிக்கு உயர்ந்த சாதனை யாக ஆகிறது. கடவுளை மறந்து கடமையை மாத்திரம் செய்யும்பொழுது, அது நாஸ்திகமாக மாறிவிடுகிறது.

கண்ணபிரான் அவதார காலத்திலிருந்து, கண்ண பிரான் பூலோகத்தில் இருந்த வரையில், பக்தி மார்க்கம் பலமாக இருந்தது. பகவானை மறந்து வேள்வி செய்த வர்கள்கூட சிலர், பிறகு கடவுளிடம் எல்லையில்லாத பக்தி செய்ய ஆரம்பித்தார்கள். இந்த முறையில் பலர் ஸர்வ ஸங்க பரித்யாகத்துடன்கூட கிருஷ்ணனையே சரணமாக பக்தி செய்து வந்தார்கள். கிருஷ்ணன் வைகுண்டம் சென்ற பிறகு எல்லா ஜனங்களுக்கும் மனத்தில் ஒரு ஏக்கம் தோன்றி இன்ன செய்வதென்று புரியாமல் மனம், புத்தி முதலியவைகள் ஒரே குழப்பமாக இருந்தது. இந்த நிலை யிலே பழைய வைதீக முறையே தலைதூக்கி வேள்விகள், யாகங்கள் போன்றவைகள் நடக்கலாயின. ஆனால் கடவுள் நினைப்பு, கடவுள் வழிபாடு இவைகள் அதில் கலக்கவே இல்லை. கடமையே பலன் அளிக்கும் என்ற நிலைமையில்,

வேள்வி முதலியவைகள், ஆடு போன்ற பிராணிகளை வைத்துக் கொண்டு ஹிம்ஸையே பிரதானமாக நடைபெற்றன. தேவதைகளுக்கும் நல்ல பலன் கிடைக்கவில்லை. மனுஷ்யர்களுக்கும் நல்ல பலன் கிடைக்கவில்லை. ஆனல் ஹிம்ஸையே பிரதானமாகக் கொண்ட வெறும் வறட்டு வேள்வியாகவே அது அமைந்தது.

இதே காலத்தில் அரசர்களிடையேயும் ஒற்றுமை இல்லாமல், ஆங்காங்கே சண்டைகளும், சச்சரவுகளும் நடந்து வந்தன. ஆன்மீக தத்துவ விஷயத்திலும், பல தினுசான கருத்து வேறுபாடுகள் ரிஷிகள் மூலமாகவும், அறிஞர்கள், பண்டிதர்கள் மூலமாகவும் வெளிவந்தன. ஆனலும் இவைகள் ஒவ்வொன்றுக்கும் ஆதாரம் இல்லாமலில்லை. வேதங்களின், உபநிஷத்களின் கருத்துக்களை ஒழுங்கான முறையில் அறிந்துகொள்ளாமல் அதில் ஒரு சில பாகங்களை மட்டும் தெரிந்து கொண்டதின் விளைவே இந்தத் தத்துவ அபிப்பிராய பேதங்கள்.

வேதங்களில் கர்ம காண்டத்தில் பிரதானமாக வேள்வி முறைகளும் தேவதா வழிபாட்டு முறைகளும் நிறையச் சொல்லப்பட்டிருக்கின்றன. வேள்விகள் நடக்கும் பொழுதும், வேள்விகளைச் செய்யும்பொழுதும் வேத மந்திரங்கள் நிறையச் சொல்லப்படுகின்றன. ஆனல், உபநிஷத் மந்திரங்கள் அவ்வளவாக இடம் பெறுவதில்லை. உபநிஷத் பகுதிகளில் பரபிரும்ம உபாசனைகளும், தத்துவ ஞானத்தை அடைய வேண்டிய நிலைமையைப் பற்றியும், தத்துவ ஞானம் அடைந்ததின் நிலைமையைப் பற்றியும் நிறையச் சொல்லப்பட்டிருக்கின்றன. தேவதைகள் வழிபாடுகள்கூட நிறைய சொல்லப்பட்டிருக்கிறது. தேவதைகள்கூட பரபிரும்ம சொரூபத்தின் நிலைமையை அறிந்துகொள்கிறார்கள் என்ற வரலாறு நிறைய இருக்கும். இந்த வேதத்தை, கர்ம காண்

டத்தை மாத்திரம் முக்கியமாக அறிந்துகொண்ட சிலர் இறைவனையே மறந்து வேள்விகள் மாத்திரம் செய்து வந்தார்கள். இது மீமாம்ஸகர்களின் மதம்.

உபநிஷத் பாகத்தில், உலகம் தோன்றுவதற்கு முன் இருந்த சூன்ய நிலைமையைப் பற்றியும், அதாவது 'அவ்யக்த' நிலையில் இருந்ததைப் பற்றியும், பிறகு உலக சிருஷ்டிக்கு காரணமாயுள்ள மாயை, அவித்தையைப் பற்றியும், பிறகு மாயையின் மூலம் உலகம் படைக்கப் பட்ட நிலைமையைப் பற்றியும், ஜீவனின் நிலைமையைப் பற்றியும், ஈஸ்வரனின் நிலைமையைப் பற்றியும் விளக்கமாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன. உலகம்' உண்டாவதற்கு முன்பிருந்த 'அவ்யக்த' நிலையை வைத்துக்கொண்டு, இந்த உலகமே சூன்ய நிலைமையிலிருந்து உண்டாயிற்றென்று அந்தப் பகுதியை மாத்திரம் வைத்துக்கொண்டு சிலர் சொல்ல ஆரம்பித்தார்கள். இவர்களைத்தான் பௌத்தர்கள் என்பார்கள். மற்றும் சிலர், ஈஸ்வரனை காரணமாக ஏற்றுக் கொண்டாலும் சூக்ஷ்மமான அணுவிலிருந்துதான் உலகம் உண்டாயிற்று என்று சொல்கிறார்கள். இதை நியாய மதம், வைசேஷிக மதம் இவை இரண்டையும் கலந்து தர்க்க மதம் என்றும் கூறுவார்கள். இந்த உலகத்திற்கு சத்வ, ரஜஸ், தமஸ் மூன்றுமே பிரதானமான காரணம் என்றும், ஜீவனின் சொரூபம், ஜீவன் நிலை சுத்தமாக இருக்கக்கூடியது. அதாவது தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாததுபோல, ஜீவனிடத்தில் புண்ய பாவ தொடர்பே ஒட்டாது என்று பூர்ணமாய் அறிந்துகொள், என்று சொல்கிறது சாங்கிய மதம்.

அஹிம்ஸையே பிரதானமாகக்கொண்டது ஜைன மதம். இதுபோன்று பல மதங்கள் தோன்றலாயின. இத்தனை மதங்களும் சில இறைவனை ஏற்றுக்கொண்டன. சில ஏற்றுக்கொள்ளவில்லை என்ற போதிலும், மறு பிறவியை மாத்திரம் எல்லா மதங்களும் ஏற்றுக்கொண்டன. கர்ம

சித்தாந்தத்தையும் எல்லா மதங்களும் ஏற்றுக்கொண்டன. இப்படி கர்ம சித்தாந்தத்தை ஏற்றுக்கொண்டதினுல்தான் மறுபிறவியே ஏற்றுக்கொள்ள வேண்டி வந்தது. அதேபோல் மறுபிறவியை ஏற்றுக்கொண்டதினுல்தான் கர்ம சித்தாந்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிவந்தது. இப்படி பரஸ்பரம் ஒன்றுக்கொன்று ஆஸ்ரயித்து வரலாயின. இந்தச் சமயத்தில் தான் ஆதிசங்கர பகவத்பாதாள் அவதரித்தார்கள்.

ஆதிசங்கரர் அவதரிப்பதற்கு முன்பு மீமாம்ஸக மதம், சாங்கிய மதம், தர்க்க மதம், முதலியவையும், பௌத்த மதம், ஜைன மதம் போன்ற எழுபத்திரண்டு வேதத்திற்கு விரோதமான மதங்களும் இருந்து வந்ததாக சங்கரவிஜய நூல்கள் கூறுகின்றன. ஆனுல் ஆதிசங்கரர் அவதாரத்தின் சமயத்தில், பௌத்த மதத்தின் கொள்கைகள் நமது பாரத தேசத்திலிருந்து வேறு நாடுகளுக்குச் செல்ல ஆரம்பித்தன. அதாவது நம் நாட்டில் அவை ஓங்கி வளர்ந்து அடங்கத் தொடங்கிவிட்டது. அப்படி பௌத்த மதம் மொத்தம் மூன்று தடவைகளில் ஓங்கி வளர்ந்து அடங்கி இருக்கிறது. அதாவது 1. சங்கரர் அவதாரத்திற்கு முன்பு 2. அசோக சக்கரவர்த்தி காலத்தில் 3. இராமானுஜர் காலத்திற்கு முன்பு.

1. ஆதிசங்கரர் காலத்திற்கு முன்புள்ள பௌத்த மதம் போன்ற மதங்கள் சாங்கிய சாஸ்திரத்தினுல் தோற்கடிக்கப்பட்டன. 2. அசோக சக்கரவர்த்தி காலத்தில் வளர்ந்து வந்த பௌத்த ஜைன மதமானது, அநேக அரசர்களால் கைவிடப்பட்டுத் தோல்வி அடைந்தது. 3. இராமானுஜர் காலத்திற்கு முன்பு இருந்த ஜைன, பௌத்த மதமானது, இராமானுஜராலும், மாத்வாச்சாரியாராலும் லிங்காயத்தர்களாலும் தோற்கடிக்கப் பட்டது.

சாங்கிய மதத்திலும், மீமாம்ஸக மதத்திலும், தர்க்க மதத்திலுமுள்ள வேதத்திற்கு விரோதமாக உள்ள பகுதி களைக் கண்டித்து விட்டு மற்றப் பகுதிகளைத் திருத்தி ஆதிசங்கரர் ஏற்றுக்கொண்டார். ஆனால் அவர் சாங்கிய மதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. மீமாம்ஸா, தர்க்க மதத்தை மாத்திரம் வேதத்திற்கு அனுகூலமான பகுதி களாக மாற்றி திருத்தி ஏற்றுக்கொண்டார். ஆதிசங்கர ருடைய நூல்களைப் பார்க்கும்பொழுது, சாங்கிய மதம், மீமாம்ஸ மதம், தர்க்க மதம் இவைகள் அதிகமாகக் கண்டிக்கப்பட்டிருக்கின்றன. மற்ற பௌத்த மதம், ஜைன மதம் முதலியவைகள் ஆங்காங்கே கண்டிக்கப் பட்டிருக்கின்றன.

பௌத்த மதமும், ஜைன மதமும் தற்போது இருந்து வரும் கிறிஸ்துவ மதம், முஸ்லீம் மதம் போன்று வேறு மத மல்ல; ஹிந்து மதத்தைத் தழுவிய மதமே. தற்போது ஹிந்து மதத்தில், இராமானுஜர் மதம், மாத்வ மதம், சைவ மதம் போன்றவைகளின் தத்துவங்கள், அதை அடையும் வழியில் மாறுபாடுகள் எப்படி இருக்கின்றதோ அது போலத்தான் பௌத்த மதமும் அந்த மதத்தின் தத்துவமும்; ஆனால், அவர்கள் வேதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அந்த வேதத்தில் சொல்லப்பட்ட கர்ம சித்தாந்தம் மறு பிறவி வாதம் இவைகளை மட்டும் ஏற்றுக்கொள்கிறார்கள். ஆசார விசாரங்கள், உபாசனைகள், அனுஷ்டானங்கள் இவைகளை யெல்லாம் ஹிந்து மதத்திலுள்ளவர்கள் செய்வது போலவே அவர்களும் செய்து வருகிறார்கள்.

பௌத்த மதம் பாரத நாட்டை விட்டு வேறு நாட் டிற்குக் குடி புகுந்து விட்டதென்றால், அந்த மதத்திலுள்ள மக்கள் போய்விடவில்லை. அவர்களெல்லாம் ஹிந்துவாகவே இருந்து வந்தனர். ஆனால், பௌத்த மதத் தத்துவங்களே வேறு நாடுகளுக்குப் போய்விட்டன. பொதுவாக ஒரு மதம்

வளர்ச்சி அடைவதற்கும், வீழ்ச்சி அடைவதற்கும் காரணமாக அந்த நாட்டையாளும் அரசர்களும், அந்த அரசர்களுக்கு ஆலோசனை கூறுதல் முதலிய வகைகளில் உதவியாய் இருந்து வரும் அந்தணர்களுமே முக்கியப் பங்கை ஏற்கின்றனர்.

இந்த முறையிலே, கிருஷ்ண பகவான் வைகுண்டத்திற்குச் சென்ற பிறகு, கலியுகம் ஆரம்பித்த காலத்திலிருந்து, மதங்களிடையே குழப்பங்கள், தத்துவங்களிடையே குழப்பங்கள் ஏற்பட்டு, முக்கியமாக மீமாம்ஸ மதமும், சாங்கிய மதமும், தர்க்க மதமும், பௌத்த மதமும் தோன்றின. மீமாம்ஸா மதம், சாங்கிய மதம், தர்க்க மதம் இந்த மூன்று மதங்களும் வேதங்களை ஒப்புக்கொள்கின்றன. தர்க்க மதம் ஈஸ்வரனையும் ஒப்புக்கொள்கிறது. ஆகவே இவை மூன்று மதங்களும் ஹிந்து மதத்தைச் சார்ந்தவைகளே! தத்துவத்தில் மட்டும் சிறிது மாறுதல் இருந்து வந்தன.

ஆதிசங்கரரின் அத்வைதச் சித்தாந்தத் தத்துவமானது, ஒரு மதத்தையும் விரோதித்துக்கொள்ளாமல், மற்ற மதங்களிலுள்ள குறைகளை மட்டுமே எடுத்துக் காட்டி, வேதங்களுக்குப் பிரமாணமாக இருந்து வரக்கூடிய தத்துவமே உண்மையான தத்துவம் என்று சொல்லி, வேதங்களுக்கு விரோதமான தத்துவங்களை ஏற்றுக்கொள்ளாமல், வேதங்களுக்குப் பிரமாணமானவைகளை ஏற்றுக்கொண்டு, தத்துவங்களை உரைப்பவைகளில் சில மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவிக்கும் மதங்களை அத்வைதச் சித்தாந்தத் தத்துவத்தை அடைவதற்குப் படிக்கட்டுகளாக அமைத்து ஏற்றுக்கொண்டுள்ளது.

ஒவ்வொரு மதத்தின் கருத்துக்களும், தத்துவங்களும் வேதங்களில் சொல்லப்பட்ட ஒவ்வொரு அம்சங்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு இருக்கின்றன. ஆனால்

வேதத்தில் சொல்லப்பட்ட ஒரு பகுதியையும் இழக்காமல், விட்டு விடாமல், ஒரு வார்த்தையையும், ஒரு பதத்தையும், அதற்குள்ள அர்த்த பாவத்தையும்கூட விட்டுவிடாமல், வேதத்திலுள்ள எல்லாப் பகுதிகளுக்கும், வார்த்தைகளுக்கும், பதங்களுக்கும் முரண்பாடோ, வியர்த்தமோ இல்லாமல் எல்லாப் பாகத்திற்கும் ஏற்றம் கொடுத்த பெருமை ஆதிசங்கரர் ஒருவருக்கே உரித்தானது. அவர் உபதேசித்த அத்வைதச் சித்தாந்தத்திற்கும் உள்ளது.

அதேபோல் வேதத்தை ஏற்றுக் கொண்டாலும், ஸ்மிருதிகளுக்கும், புராணங்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து, அதன் கருத்துக்களுக்கே ஏற்றமும் கொடுக்கும் முறையில் சில மதங்கள் இருந்து வருகின்றன. ஆனால் ஆதிசங்கரர் சித்தாந்தமான, அத்வைதச் சித்தாந்தத்தில் வேதங்களுக்கும், ஸ்மிருதிகளுக்கும், புராணங்களுக்கும், இதிகாசங்களுக்கும் சமானமான ஏற்றம் கொடுத்து, கௌரவம் தந்து, ஸ்மிருதிகள், புராணங்கள், இதிகாசங்கள் இவைகளுக்கெல்லாம் மூலம் வேதமாதலால் அந்த வேதத்திற்கே அதி முக்கியத்துவம் கொடுக்கிறார் ஆதிசங்கரர். அத்துடன் புராணங்கள், இதிகாசங்களை விரோதித்துக் கொள்ளாமல், அதன் கருத்துக்களையும் வேதத்தின் கருத்துக்களுக்கு விரோதமில்லாத முறையில் விளக்கம் தருகிறார் ஆதிசங்கரர்.

இந்த மத நூல்களெல்லாம், தத்துவ நூல்களெல்லாம் ஸம்ஸ்கிருத பாஷையிலேயே எழுதப்பட்டு, புழக்கத்தில் இருந்து வந்தன. அதனால் ஸம்ஸ்கிருதம் அறிந்தவர்கள் மாத்திரம் இந்தக் கருத்துக்களை அறிந்துகொண்டு அதன் மூலம் வாழ்க்கையை நடத்தி வந்தனர். அரசர்களும், அந்தணர்களும் ஸம்ஸ்கிருத அறிவில் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்ததால், அவர்கள் எவ்வழி சென்றார்களோ அவ்வழியே மக்களும் கடைப்பிடித்து வந்தார்கள். ஆகவே ஸம்ஸ்கிருத அறிவில்லாத எல்லா ஜனங்களுமே தத்துவத்தின்

உண்மையை அறிந்து கொண்டு, மதம் மாறவில்லை; அறிவுள்ளவர்கள் எவ்வழியோ, அவ்வழியே இவர்களும் சென்றனர். உலகம் தோன்றின காலம் முதற்கொண்டே இவ்விதமாகவே இருந்து வருகிறது. உதாரணமாக அரசர் களுக்கும் அரசர்களுக்குமிடையே பகை இருந்து வந்தது. மக்களுக்குள் அவ்விதம் இல்லை. ஆனால் யுத்தம் என்று வரும்பொழுது, அரசன் ஆணையைக் கேட்டு யுத்தம் செய்ய வேண்டிய ஒரு நிலை மக்களிடையே ஏற்படுவதுண்டு.

இதுபோலத்தான் சமயத் துறையிலும், மதத் துறை யிலும் இருந்து வந்தன. இந்த நிலை பௌத்த மதத் தோன்ற லுக்குப் பிறகு நீடிக்கவில்லை. பௌத்த ஜைன மதம் தோன்றினதற்குப் பிறகு, மக்களையெல்லாம் தங்கள் பக்கம் திருப்பும் வகையில், அவர்கள் பேசும் பாஷையான பிராந்திய பாஷையிலேயே நூல்களையெல்லாம் இயற்ற ஆரம்பித்து விட்டார்கள். ஸம்ஸ்கிருத பாஷை தவிர, பிராக்ருதம், பாலி முதலிய பாஷைகளிலும், இந்தியாவிலுள்ள மக்கள் பேசும் பாஷையான தமிழ் முதலிய பாஷைகளிலும், தங்கள் மத நூல்களை எழுதினார்கள். அதனால் பாமர மக்கள்கூட மற்ற சமயத்தின் கருத்துக்களையும் தாங்களாகவே, சுயமாகவே அறிந்தகொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. அதன் பலன் அந்தக் காலத்தில் பாமர மக்கள் பௌத்த ஜைன மதத்தில் நிறையச் சேர்ந்துவிட்டார்கள். அதே சமயத்தில்தான் ஹிந்து சயமத்தைச் சேர்ந்த பெரிய பெரிய மஹா புருஷர் களும், ஞானிகளும், சித்த புருஷர்களும் நிறையத் தோன்ற, அவர்கள் மூலம் அந்தந்தப் பகுதியில் மக்கள் பேசும் பாஷை யிலேயே பக்தி நூல்கள் நிறையத் தோன்றலாயின. பிற் காலத்தில் அதை அனுசரித்து நீதி நூல்கள், தத்துவ நூல்கள் முதலிய எல்லாவிதமான நூல்களும் அந்தந்தப் பிராந்திய பாஷையில் வரத் தொடங்கிவிட்டன. இந்தக் காலத்தைத்தான் ஆழ்வார்கள், நாயன்மார்கள் தோன்றின காலம் என்று கூறுவார்கள். அந்தக் காலத்திலுள்ள பாமர ஜனங்கள் நமது ஹிந்து மதக் கருத்துக்களையும், தத்துவங்

களையும் நன்குக அறிந்துகொண்டு எல்லோரும் ஹிந்து மதத்திற்கே வந்துவிட்டார்கள். இதற்குச் சிறிது காலத்திற்குப் புறகு வந்த அசோக சாம்ராட் சக்கரவர்த்தி, நாகார்ச்சுனன் போன்ற அரசர்களும் நாகநந்தி போன்ற துறவிகளும், பௌத்த ஜைன சமயங்களை ஆதரித்ததால் அவர்களை ஒட்டி மக்கள் பலருமே பௌத்த ஜைன மதத்தில் ஈடுபட்டார்கள். பிறகு அந்த அரசர்களுடைய காலம் முடிந்தவுடன் ஜனங்கள் பொதுவாக ஹிந்து சமயத்தையே தழுவ ஆரம்பித்துவிட்டார்கள்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு அதாவது இராமானுஜர், மத்வாச்சாரியார், லிங்காயத்தார்கள் காலத்திற்கு முன்பு இதுபோல் பௌத்த, ஜைன மதம் தலைதூக்கலாயின. அப்பொழுது அந்த பௌத்த ஜைன மதக் கருத்துக்களைப் போக்கடிப்பதற்காக இராமானுஜர், மாத்வர், சைவ சமயாச்சாரியார், மெய்கண்டர், லிங்காயத்துகாரர்கள் எல்லோரும் முயற்சி செய்து போக்கடித்தனர். அப்பொழுதுதான் ஹிந்து சமயத் தத்துவங்களுள் வேற்றுமைகள் தோன்றலாயின. ஆனலும் அடிப்படையான வேதத்திற்கு, ஸ்மிருதிக்கு, புராண, இதிகாசங்களுக்கு ஏற்றம் குறைவு இல்லை. அவைகளைப் பிரமாணமாக ஏற்றுக்கொண்டுதான் இந்த மதங்கள் தோன்றலாயின.

லிங்காயத்தார்கள், வேத, புராண, இதிகாசங்களைப் பூரணமாக ஏற்றுக்கொள்வதில்லை. ஆனல் ஹிந்துக்கள் போலவே அனுஷ்டானம், ஆசாரம், பூஜை—முதலியவைகளைக் கடைப்பிடித்து வந்தார்கள். தத்துவத்தின் அடிப்படையில் உருவ வழிபாட்டை ஏற்றுக்கொண்டார்கள். வீர சைவம் வேருன்றி இருப்பதின் காரணம், இராமானுஜர், மத்வாச்சாரியர் இருவருமே. இவ்விருவருமே தத்துவ அடிப்படையில் ஒரே தெய்வத்தை அதாவது ஸ்ரீமந் நாராயணனை

விஷ்ணுவை, ஒத்துக்கொண்டார்கள். ஆனால் அதை அடையும் சாதனங்களில், செய்யும் முயற்சிகளில் வேற்றுமைகள் இருந்து வந்தன. மேலும் ''வைஷ்ணவ'' என்ற சொல்லால் இராமானுஜர் சித்தாத்தம், மாத்வ சித்தாந்தம் இரண்டுமே குறிப்பிடப்படும்.

இருவருமே விஷ்ணுவே. ''பரதத்துவம்'' என்ற கொள்கையை உடையவர்கள்' ஆகவே வைஷ்ணவர்கள் என்று இருவருமே அழைக்கப்படுகிறார்கள். ஆனால் உலக வாழ்க்கையில் வைஷ்ணவம் என்றால், அது இராமானுஜர் சித்தாந்தத்தை மாத்திரமே குறிப்பிடும். பௌத்த, ஜைன சமயத்தைச் சேர்ந்தவர்கள், பொதுமக்களுடன் தொடர்பு கொள்வதற்கு, எல்லாப் பாஷைகளிலும் நூல்கள் இயற்றுவதுடன் மாத்திரம் நிற்காமல், அனுஷ்டான முறைகளிலும் நேரிடையாகத் தொடர்பு கொண்டு வந்தனர். பெண்களுக்கும் அனுஷ்டான முறைகளை, சந்யாசினி முறைகளை ஏற்படுத்தினார்கள்.

ஆகவே, வைணவ, சைவ, வீர சைவ முதலிய தத்துவங்களைச் சேர்ந்தவர்களும் பிராந்திய பாஷைகளில் நூல்கள் எழுதுவது, பிரச்சாரம் செய்வது, இவைகளோடு மாத்திரம் நின்று விடாது, வீர சைவர்கள் லிங்கத்தை உடலில் தரிப்பதிலும், அதிலும் ஆண் பெண் இருவருக்கும் சமானமான அந்தஸ்து அளிப்பதிலும் ஈடுபட்டார்கள். சைவ, வைணவர்களில் தீக்ஷை கொடுப்பது ''சமாஸ்ரயணம்'' செய்வது அதாவது பஞ்ச சமஸ்காரம் செய்வது போன்ற நேரிடை நடவடிக்கைகளிலும் ஈடுபட்டுப் பொதுஜனத் தொடர்பைக் கொண்டனர். இவர்களிலும் ஆண் பெண் இருவருக்கும் சமானமான சமஸ்காரங்கள் அங்கீகரிக்கப்பட்டன.

சங்கராச்சாரியர் பரம்பரையில் வந்தவர்களான அத்வைதிகள் என்று செல்லக்கூடிய ஸ்மார்த்தர்களிலும் பூஜை, அனுஷ்டான கர்மாக்கள் இருந்துவந்தன. இன்றும் இருந்து

கொண்டு இருக்கின்றன. ஆனால் தீக்ஷை, சமஸ்காரம், லிங்கம் கட்டிக்கொள்வது போன்ற சடங்குகள் இவைகள் இல்லாமல் ஊரிலுள்ள ஏதோ ஒரு பெரியவர் மூலமாக அனுஷ்டான கிரமங்களை, உபதேசங்களைப் பெற்றுக் கொண்டு தங்கள் கடமைகளைச் செய்து வந்தார்கள். அத்வைத சம்பிர தாயத்தில் மதாச்சாரியர்களான மடாதிபதிகள் இருந்தாலும் பொது மக்களுக்கு அவர்கள் நேராக உபதேசம் முதலியவை களை அளிக்காமல், தங்களுக்கு அடுத்து வரும் பரம்பரை யாருக்கு மாத்திரமே உபதேசம் செய்து கொண்டு, அதே நேரம் பொது மக்களுக்கு ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங் களிலும், வாழ்க்கைத் துறைகளிலும் உறுதுணையாக நின்று கொண்டு, வழிகாட்டியாக உதவிக்கொண்டும் இருந்து வந்திருக்கிறார்கள். இன்றும் இருந்து கொண்டு இருக்கிறார்கள்.

சைவ, வைணவ, மதாச்சாரியர்கள் தங்கள் மதத் தத்து வத்தை மாத்திரம் உபதேசிக்கிறார்களே தவிர பொது ஜனங் களுக்குள்ள வாழ்க்கைப் பிரச்னையில் தோன்றும் கஷ்ட நஷ்டங்களுக்கு வளைந்து கொடுத்துப் பரிகாரம் தேடும் நிலைமையில் இருக்கமாட்டார்கள். அவர்களுக்கு அவர்கள் சம்பிரதாயம், கட்டுப்பாடு இதுவே மிக மிக முக்கியம். மேலும் வைணவத்தில் நாராயணன் ஒருவரே அறியத் தகுந்தவன். அடையத் தகுந்தவன். அவன்தான் பரமாத்மா. மற்ற லக்ஷ்மி, பரமசிவன் உள்பட உருவ மூர்த்திகளெல்லாம் ஜீவர்களே!...ஆனாலும் நம்மைப் போல் சாமான்ய ஜீவர் களாக இல்லாமல், உயர்ந்த புண்ணிய ஜீவர்களாகச் சொல்லப்படுகிறது. சைவர்கள், வீர சைவர்கள் இருவரும் சிவனையே பரம்பொருளாக, பரமாத்மாவாகக் கருதுகிறார்கள். மற்ற மஹாவிஷ்ணு உள்பட உருவ மூர்த்திகளெல்லாம் ஜீவர்கள் அதாவது நம்மைப் போலல்லாமல் உயர்ந்த புண்ணிய ஜீவர்கள்.

ஆனால் அத்வைத வேதாந்த சித்தாந்தப் பிரகாரம், விஷ்ணு, சிவன், லக்ஷ்மி, முதலிய உருவ மூர்த்திகளெல்லாமே ஈஸ்வரன் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. ஆகவே ஜீவன் என்ற பெயராலேயோ, பரமாத்மா என்ற பெயராலேயோ அழைக்கப்படாமல் ஈஸ்வரன் என்ற பெயராலேயே அழைக்கப்படுகின்றனர். உலகம் படைக்கும் பிரம்மா, இந்திரன் முதல் புழு பூச்சி வரை எல்லாம் ஜீவராசிகள். ஆனால் புண்ணிய, பாவத்தை அனுசரித்து உயர்ந்த ஜீவராசிகள், தாழ்ந்த ஜீவராசிகள் என்று சொல்லப்படும் புண்ணியம் செய்த ஜீவராசிகள், பாவம் செய்த ஜீவராசிகள், அதிகம் புண்ணியம் செய்த ஜீவராசிகள், அதிகம் பாவம் செய்த ஜீவராசிகள் என்று இவ்விதமாகப் பிரிக்கப்படும்.

உருவமுள்ள தெய்வீக மூர்த்திகளெல்லாம் ஈஸ்வரனுகவே சொல்லப்படும். பிராணிகள் உள்பட சகல ஜீவராசிகளுள் இருக்கும் ஆத்ம தத்துவத்தை ஜீவாத்மா என்று குறிப்பிடுவார்கள். ஈஸ்வரனுக்கும் மேலாக பரமாத்ம சொரூபத்தைச் சொல்லுவார்கள். ஜீவராசிகளெல்லாம் ஈஸ்வர உபாசனை மூலமாக பரமாத்ம தத்துவத்தை அறிய வேண்டும், அடைய வேண்டும் என்று சொல்லுவார்கள். அத்வைத சித்தாந்தப்படி மேலே கைலாசம், சொர்க்கம், வைகுண்டம் முதலிய எல்லா உலகங்களும் உண்டு. ஆனால் மோக்ஷம் அடைவதற்கென்று மேல் உலகம் சென்று அதாவது கைலாசம், வைகுண்டம் போன்ற உலகங்களுக்குச் செல்ல வேண்டுமென்பதில்லை.

இந்தப் பூவுலகிலேயே நம்முடைய ஜீவாத்மாவின் உண்மைத் தத்துவத்தை அறிந்துகொண்டு, அதன் மூலம் பரமாத்ம அனுபவம் பெற்று, ஆன்ம ஜோதியை அடைந்து, ஜீவன் முக்தி மூலம் விதேக முக்தியும் அடைந்துவிட

முடியும். இந்த விதேக முக்தி அடைவதற்கென்று, ஜீவன் முக்தி அடைவதற்கென்று மேலுலகம் செல்ல வேண்டிய அவசியமில்லை. இந்த நிலையை அடைவதற்கு முதலில் உருவ வழிபாடு அவசியமாகிறது. அந்த உருவ வழிபாட்டில் பல மூர்த்திகள் இருந்தாலும், அவைகளுள் நமக்குப் பிடித்த மான ஒரு மூர்த்தியை எடுத்துக்கொண்டு, அந்த மூர்த்தியை வழிபட்டு, மனத்தில் நிறுத்தி, தியானம் செய்து, அந்த மூர்த்திகள் எந்த ஆன்மாவிலிருந்து தோன்றிற்றோ அந்தத் தோற்றமும் மறைந்துவிட்டால் அப்பொழுதுதான் நாம் நம்முடைய ஜீவனின் உண்மையான சொரூபத்தையும், பரமாத்மாவின் அனுபவத்தையும் அடைந்தவர்களாக ஆகிறோம்.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மூர்த்தி வழிபாடு செய்வதற்கு விருப்பம் இருக்கும். அதற்காகப் பல உருவ மூர்த்திகள் இருக்கின்றன. அவைகளில் எந்த உருவ மூர்த்தியை வழிபட்டாலும் அதன் பலன் ஆன்ம ஜோதியை அறிவதே! பரமாத்மாவை அறிந்துகொள்வதே. உருவ மூர்த்திகளுள் ஏற்றத் தாழ்வுகளோ, ஜீவன் போன்ற நினைப்போ, சொல்லோ இருக்கக்கூடாது.

பொதுவாகப் பொது ஜனங்கள் கோவிலுக்குச் சென்றால் பிரதான சந்நிதிக்கு, பிரதான மூர்த்திக்கு அர்ச்சனை, அபிஷேகம் முதலிய செய்து பிரதானமாக வழிபட்டாலும், அந்தக் கோவிலிலுள்ள மற்ற எல்லா மூர்த்தி களிடத்திலும் இறைவன் என்ற எண்ணத்துடன்தான் வழிபட்டு வருகிறார்கள். தவிர, நம்மைக் காட்டிலும் சிறிது புண்ணியம் கூடச்செய்த ஜீவர்கள் என்ற எண்ணம் சிறிதளவும் ஏற்படுவதில்லை. ஆனால், அத்வைத சம்பிர தாயத்தைத் தவிர மற்ற வேறு எந்த சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களாய் இருந்தாலும், அந்தச் சம்பிரதாயத்தின்

தத்துவத்தின் அடிப்படையைப் பார்க்கையில், பல உருவ மூர்த்திகள் இருந்தாலும் அதில் ஒரு உருவ மூர்த்தியை எடுத்துக்கொண்டு, அந்த உருவ மூர்த்தி ஒன்றேயொன்று தான் பரமாத்மாவாகவும், மற்றவைகளெல்லாம் ஜீவாத்மா வாகவும் சொல்லப்பட்டிருக்கும். அப்படி இல்லாமல் எல்லா உருவங்களிலும், எல்லா ஜீவராசிகளிலும் இறைவ னுக்கும் மேலாக உள்ள பரமாத்ம தத்துவத்தையே காண வேண்டுமென்று சொல்லப்பபட்டிருக்கிறது, சங்கரர் சித்தாந் தத்தில். ஆகவே, சங்கரர் சித்தாந்தக் கொள்கைப்படி எந்தப் பாமர ஜனங்கள் இன்றும் எல்லா உருவ மூர்த்திகளிலும் சமமாக இறைவனைக் காண்கிறார்களோ அவர்கள்தான் பரிபூரண ஹிந்துவாக ஆகிறார்கள்.

இராமானுஜர், மத்வாச்சாரியர் இவர்களால் இரண்டு வைணவங்கள் விசேஷமாக வளர்ந்ததினாலேயே சைவமும், வீர சைவமும் விசேஷமாக வளரத் தொடங்கிவிட்டன. இராமானுஜர் சித்தாந்தத்தில் வைணவக் கோவில் பூஜைகள் உள்பட பூஜை முறைகள் மாற்றப்பட்டன. பூஜை முறைகள் நூல்கள் பழமையானவை. அந்த நூல்களை வைத்துக்கொண்டு பூஜை முறையை ஆகமத்திற்கும் தங்க ளுடைய வைணவக் கொள்கைக்கும் முக்கியத்துவம் கொடுத்து மாற்றினார்கள். வைணவக் கோவில்களில் பூஜை முறைகள் இரண்டு உள்ளன. அதில் ஒன்று வைகானசம், மற்றொன்று பாஞ்சராத்ரம்.

வைகானசம், வைகானச மஹரிஷி முதற்கொண்டு வெகு காலமாகப் பரம்பரையாக வந்துகொண்டிருக்கும் ஒரு முறை. அதற்கு தீக்ஷை முதலியவைகள் அதாவது வைணவத்திலுள்ள தென்கலை, வடகலை சம்பிரதாயங்களைக் கடைப்பிடிப்பதில் அவ்வளவு தீவிரத்தைக் கையாளுவ தில்லை. வைணவத்திற்குரிய மதச் சின்னமான நெற்றிக்கு இட்டுக்கொள்வது போன்ற சில சடங்குகள் மாத்திரமே

இராமானுஜர் சம்பிரதாயத்தை அனுசரித்துச் செய்யப்படுகிறது. மற்ற காரியங்களெல்லாம் வைகானச மஹரிஷியின் சூத்திரத்தை அனுசரித்துத்தான் செய்து வருகிறுர்கள்.

ஆனுல் பாஞ்சராத்ரம் என்ற ஆகம முறை பூஜையானது, இராமானுஜர் சம்பிரதாயத்தைச் சேர்ந்த யாராயிருந்தாலும் பூஜை செய்யலாம் என்று கூறுகிறது. வைகானச சம்பிரதாயப்படி வைகானச மஹரிஷியினுடைய வம்சத்தில் பிறந்தவர்களுக்கு மாத்திரமே பூஜை முறைகள் செய்ய அதிகாரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இராமானுஜர் காலத்திலிருந்து வைணவக் கோவில்களிலெல்லாம் இராமானுஜர் மத சம்பிரதாயத்தை அனுசரித்து, பூஜை, அர்ச்சனை, தீர்த்தம், நமஸ்காரம், திலகதாரணம் முதலிய எல்லாக் காரியங்களும் மாற்றப்பட்டன.

அதேபோல் சிவன் கோவில்கள் எல்லாம் சைவ சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களால், சிவகாமம் என்ற ஆகம முறைப்படி சிவாச்சாரியார், ஆதிசைவர் என்ற பெயரால் அழைக்கக்கூடிய குருக்களுக்கு மாத்திரமே, பூஜை செய்ய அதிகாரம் ஏற்படுத்தப்பட்டது. வைணவர்களிலும் பலர் அந்தணராய் இருந்தாலும் எல்லா அந்தணர்களுக்கும் பூஜை செய்யும் உரிமை வழங்காமல், குறிப்பிட்ட ஒரு இனத்தவருக்கே அந்தப் பூஜை செய்யும் அதிகாரம் வழங்கப்பட்டது. ஆனுல் அந்த இரண்டு முறைகளும் ஏற்படுவதற்கு முன்பும் இப்பொழுதும்கூட, பூஜையில், பூஜை செய்பவர்களில், பூஜை செய்யும் மூர்த்திகளில் வேற்றுமையும் ஏற்றத்தாழ்வும் பார்க்காமல், போதாயனர் போன்ற ரிஷிகளால், சொல்லப்பட்ட எல்லாவிதமான பூஜைகளும், பிரதிஷ்டைகளும், நித்ய பூஜைகளும் அத்வைத சம்பிரதாயத்தைச் சார்ந்த அந்தணர்கள் எல்லோருமே செய்துகொண்டு வந்தார்கள்; செய்தும் வருகிறுர்கள்.

போதாயன சூத்திரத்தின்படி, பூஜை செய்பவர்கள் விஷ்ணு கோவிலில் பூஜை செய்து வந்தாலும் சரி, சிவன் கோவிலில் பூஜை செய்து வந்தாலும் சரி எல்லா மூர்த்திகளையும் சமமாகப் பாவித்து பூஜை செய்து வந்திருக்கிறார்கள். வந்து கொண்டும் இருக்கிறார்கள். அதே போல் வீட்டு பூஜையும் சரி, கோவில் பூஜையும் சரி இரண்டும் ஒன்றாகவே இருக்கும். ஆனால் சைவ, வைகானச, பாஞ்சராத்ர ஆகமப் பிரகாரம் செய்யும் பூஜை முறைகளில் வீட்டில் முதன்முதல் பூஜை செய்துவிட்டு, பிறகு கோவில் பூஜை செய்ய வேண்டும். வீட்டில் செய்யும் பூஜைக்கும் கோவிலில் செய்யும் பூஜைக்கும் நிறைய வித்தியாசமுண்டு. அந்தணர்களுடைய கடமைகளில் ஒன்றாக வீட்டுப் பூஜையொன்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. கிராம தேவதைகளின் பூஜை முறைகள் ஆகம, தாந்திரிக முறைப்படியே நடைபெறும். முக்கியமான விசேஷ காலங்களில் மாத்திரம், அந்தணர்கள் வந்து கிராமதேவதை பூஜைகளை நடத்திக் கொடுப்பார்கள். மற்றக் காலங்களில் பூசாரி என்று சொல்லப்படுபவராலேயே பூஜை முதலியவைகள் நடைபெறும். இந்தப் பூசாரி என்பவர்கள் மண் பாண்டம் செய்யும் குயவர்கள் வகுப்பைச் சேர்ந்தவர்களாகவோ, துணிகளைச் சுத்தம் செய்யும் வண்ணான் வகுப்பைச் சேர்ந்தவர்களாகவோ அதிகம் இருப்பார்கள். ஆனால் அவர்களுக்கென்று விசேஷ தீக்ஷை, பாரம்பரியம், சமஸ்காரம் என்பது போன்றவை விசேஷமாக ஒன்றும் கிடையாது. கிராமங்களிலுள்ள விநாயகர் போன்ற சிறு கோவில்களில், தேசிகர் என்று சொல்லக்கூடிய ஓதுவார் வகுப்பைச் சேர்ந்தவர்களும் பூஜை செய்வது உண்டு. அவர்களுக்கும் விசேஷ நியமங்கள் ஒன்றும் கிடையாது. சிலர் சிவ தீக்ஷை பெற்றவர்களாக இருப்பார்கள்.

கிராம தேவதை கோவில்களிலோ, விநாயகர் கோவில் களிலோ, அல்லது நகரத்துக் கோவில்களிலோ யார் பூஜை செய்பவராயிருந்தாலும் அந்தந்தக் கோவில் பூஜை செய்ப வரைத் தவிர, பொதுமக்கள் கர்ப்பகிரஹத்திற்குள் போவதென்பது தமிழ்நாடு, கேரளம், மஹாராஷ்டிரம், ஆந்திரா போன்ற மாநிலங்களில் கிடையவே கிடையாது. மற்ற மாநிலங்களிலோவெனில். கர்ப்பகிரஹம், அர்த்த மண்டபம், மஹாமண்டபம் போன்ற சில்ப சாஸ்திர சம்பிர தாயப் பிரகாரம் அமைப்பே கிடையாது. மேற்சொன்ன நாலு மாநிலங்களில் மாத்திரமே மேற்சொன்ன அமைப்புக் களோடு கூடிய கோவில்கள் இருக்கின்றன. ஆகவேதான் மேற்சொன்ன நாலு மாநிலத்திலும் பூஜை செய்பவர் யாரா யிருந்தாலும், அவர்களைத் தவிர மற்றவர்கள், எந்தக் குறிப்பிட்ட இடத்தில் நின்று தரிசனம் முதலியவைகள் செய்துகொள்ள வேண்டுமோ அங்கேயே இருந்துதான் தரிசனம் செய்ய வேண்டி இருக்கிறது. ஆகவே அவர்கள் அந்தணர்களாய் இருந்தாலும்கூட அவர்கள் எல்லோரும் தங்களுடைய நன்மைக்காக தங்கள் தங்கள் வீட்டிலேயே பூஜைகளைச் செய்து கொள்வதற்கு உரிமை உண்டே தவிர, உலக க்ஷேமத்திற்காக ஏற்படுத்தப்பட்ட கிராமசக்தி, கிராம தேவதா, மற்றுமுள்ள எல்லாக் கோவில்களிலும் யார் யார் பூஜை செய்து கொண்டு வருகிறார்களோ அவர்கள் மாத்திரமே கருவறைக்குள் அதாவது கர்ப்பகிருஹத்திற்குள் சென்று வரும் வழக்கம் இருந்து வருகிறது. அந்தணரைத் தவிர மற்ற வகுப்பினருக்கும் பூஜை செய்வதற்கு உரிமை இருந்தாலும் அந்தப் பூஜை செய்பவரைத் தவிர மற்ற பொது ஜனங்கள் கருவறைக்குள் சென்று பூஜை செய்வது என்பது எங்குமே கிடையாது. பொது ஜனங்கள் பூஜை செய்பவர்கள் மூலமாகவே தங்கள் பூஜையை நடத்திக் கொள்ள வேண்டும்.

அதெல்லாமல் உண்டியல் பிரார்த்தனை, தலைமொட்டை அடித்துக் கொள்வது, காது குத்திக் கொள்வது, விளக் கேற்றி வைப்பது, தேங்காய் உடைப்பது, கற்பூரம் ஏற்றிக் காட்டுவது போன்றவைகளெல்லாம் கருவறைக்கு வெளியி லிருந்தே எல்லோரும் செய்துகொண்டு போகலாம். கிராம தேவதா கோவில்களில், வைகானச, பாஞ்சராத்ர, ஆகமத் தைச் சேர்ந்த வைணவர்கள் பூஜை செய்வது கிடையாது. சைவ சித்தாந்தத்தைச் சேர்ந்தவர்களும், அத்வைத சித்தாந் தத்தைச் சேர்ந்தவர்களுமே கிராம தேவதா பூஜைகளில் ஈடுபடுவார்கள். ஆனால் கிராம தேவதைகளுக்குப் பிரார்த்தனை போன்ற காரியங்களில் வைணவர்களும் கலந்து கொள்வார்கள். மேலும் இராமானுஜர் சம்பிர தாயத்தைச் சேர்ந்த வைஷ்ணவர்கள் அதிலும் பாஞ்சராத்ர ஆகமத்தைச் சேர்ந்தவர்கள், தென்கலை, வடகலை என்ற இரு பிரிவினராக இருந்துகொண்டு கோவில் பூஜை முதலி யவைகளில் மிகுந்த வேற்றுமை காட்டுவார்கள். ஒரே வைணவம்தான், ஒரே இராமானுஜர்தான். இருந்தும் இந்த வேற்றுமை அவர்களிடையே எப்பொழுதுமுண்டு.

வைகானச ஆகமத்தைச் சேர்ந்த வைணவர்களில் தென் கலை, வடகலை இருந்தாலும், பாஞ்சராத்ர ஆகமத்தைச் சேர்ந்த வைணவர்கள் எவ்வளவு வேற்றுமை காட்டுவார் களோ அவ்வளவு வேற்றுமை இவர்களிடம் இராது. உதாரணமாக, வைகானச ஆகமத்தில் தென்கலை, வடகலை இருபிரிவினர் இருந்தாலும் அவர்கள் இருவரும் சேர்ந்தே ஒரே கோவிலில் பூஜை செய்வார்கள். ஆனால் பாஞ்சராத்ர ஆகமப் பிரகாரம் தென்கலைக்காரரர் பூஜை செய்யும் கோவிலில் வடகலைக்காரர்களை பூஜை செய்ய அனுமதிக்க மாட்டார்கள். அதேபோல் வடகலைக்காரரர் பூஜை செய்யும் ஒரு கோவிலில் தென்கலைக்காரர் பூஜை செய்ய அனுமதிக்க மாட்டார்கள்.

வைகானச ஆகம பூஜை முறையானது, இராமானுஜர் காலத்திற்கு முன்பிருந்தே வரக்கூடிய ஒரு முறை. பாஞ்ச ராத்ர ஆகமபூஜை முறையானது, இராமானுஜர் காலத்தி லிருந்து வரக்கூடிய ஒருமுறை. ஆகவேதான் வைகானச முறையை வைகானச பரம்பரையில் வந்தவர்கள் மாத்திரம் தான் கடைப்பிடிக்க வேண்டும். பாஞ்சராத்ர ஆகமத்திலோ வெனில், சாமான்யமாக சைவரோ ஸ்மார்த்தரோ, மற்ற ஜனங்களோகூட இராமானுஜர் சம்பிரதாயத்தைத் தழுவி விட்டால் அவர்கள் பாஞ்சராத்ர ஆகமப் பிரகாரம் பூஜை செய்ய தீக்ஷை பெற்று, அதிகாரம் பெற்றவர்களாக ஆகிவிடுவார்கள். சிவாலயங்களிலும் சிவ பூஜை செய் பவர்கள் குருக்களாகவேதான் இருக்கவேண்டும். மற்ற வகுப் பினருக்கு இடமில்லை. இராமானுஜர் சம்பிரதாயத்தைப் போன்று யாராவது சிலர் சிவதீக்ஷை பெற்றாலும்கூட அவர்களும் சிவபூஜை செய்வதற்கு அதிகாரம் கிடையாது. அவர்கள் குருக்கள் வம்சத்தில் பிறந்தவர்களாய் இருந் தாலன்றி அவர்களுக்கு அந்த உரிமை கிடையாது.

உலகம் தோன்றின காலம் முதல், அனுதியாக வீட்டில் பூஜை செய்யும் வழக்கமானது ஒரு கடமையாக இருந்து வருகிறது. அப்படிச் செய்யும் பூஜைக்கு ''பஞ்சாயதன'' பூஜை என்று பெயர். ஐந்து மூர்த்திகள் அந்த பூஜையில் இடம் பெறும். அதாவது சிவன், விஷ்ணு, விநாயகர், அம்பாள், சூரியன் என்பவர்கள். இவற்றைச் சிவனை மைய மாக வைத்து மற்ற நான்கு மூர்த்திகளையும் நாலு பக்கமும் வைத்துப் பூஜை செய்வது ''சிவபஞ்சாயதனம்'' எனப்படும். அதே மாதிரி விஷ்ணுவை மையமாக வைத்து மற்ற நான்கு மூர்த்திகளையும் நாலு பக்கமும் வைத்துப் பூஜை செய்வது ''விஷ்ணு பஞ்சாயதனம்'' எனப்படும். அவ்வாறே ஐந்து மூர்த்திகளுள் எதை மையமாக வைத்துப் பூஜை செய்கிறோமோ அந்த மையாக உள்ள மூர்த்தியின் பெயரை முதலில் சேர்த்து அந்த பஞ்சாயதனம் என்று

பெயர் குறிப்பிடப்படும். பொதுவாகச் சில ஜனங்களுக்கு சிவபக்தி விசேஷமாக இருக்கும். சில ஜனங்களுக்கு விஷ்ணு பக்தி விசேஷமாக இருக்கும். இதுபோலவே ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொரு மூர்த்தியின்மீது விசேஷமான பக்தி இருக்கும். இவைகளையெல்லாம் அனுசரித்தே அவரவர் களுக்கு ஏற்றவாறு அந்த பஞ்சாயதன முறை ஏற்படுத்தப் பட்டு நடந்தும் வருகிறது.

இதையேதான் ஆதிசங்கரர் பகவத்பாதாள், சுப்ரமண்ய சுவாமி மூர்த்தி ஒன்றை அதிகப்படுத்தி ஷண்முகஸ்தாபனம் என்பதை ஸ்தாபித்தார். இவையெல்லாம் வீட்டு பூஜை முறைகளில் சொல்லப்பட்டிருக்கும் முறை. ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் பொதுஜனங்கள் எல்லோ ருக்கும் வழிபாடு செய்வதற்கென்று, ஒரு பிரதிநிதியின் மூலம் பூஜை நடைபெற்று வரும் கோவில்களே சிவால யங்கள், விஷ்ணு ஆலயங்கள், கிராமதேவதா ஆலயங்கள் எனப்படும். இந்தக் கோவில்களில் பூஜை நடைபெறுவதினுல், நடத்தி வைப்பவர்களுக்கும் நன்மை உண்டு, அதன் மூலம் தேசத்திற்கும் நன்மை உண்டாகும். வீட்டில் நாம் பூஜை செய்வதன்மூலம் நமக்கு மாத்திரமே நன்மையுண் டாகும். ஆகவே கோவில் பூஜைகள் நம்முடைய நன்மைக் காக மட்டுமல்லாமல் உலகக்ஷேமத்திற்காகவும் ஏற்படுத்தப் பட்டன. இந்தக் கோவில் பூஜை முறைகளெல்லாம் சைவ, வைகானச, பாஞ்சராத்ர போன்ற ஆகம சாஸ்திரங் களில் சொல்லப்பட்ட பிரகாரம் நிர்மாணிக்கப்பட்டு, பூஜை முதலியவைகள் நடைபெற்று வருகின்றன.

சிற்சில கோவில்களில் ஸ்மார்த்த முறைப்படியும் பூஜைகள் நடைபெற்று வருகின்றன. தென் மாநிலம் நான்கைத் தவிர, மற்ற மாநிலங்களிளெல்லாம் சிவ, விஷ்ணு ஆலயங்களில் ஸ்மார்த்த பூஜை பிரகாரமும், இதர கோவில்களில் தாந்திரீக சாஸ்திர பிரகாரமும் நடைபெற்று

வருகின்றன. கோவில் உருவ வழிபாட்டு முறை பல காலமாக இருந்து வந்தாலும், இராமானுஜர் போன்றவர்களுடைய காலத்திலிருந்துதான், கோவில்கள் பூஜா முறைகளெல்லாம் மாற்றப்பட்டு, மதத்தை அனுசரித்து வைணவக்கோவில்கள் அமைக்கப்பட்டன. அதற்கு முன்பெல்லாம் வைணவக் கோவில்களில் விஷ்ணு பக்தரான அந்தணர்களே பூஜை செய்து வந்திருக்கிறார்கள்.

ஆகவே மூன்றாவது முறையாக நம் நாட்டில் பௌத்த ஜைன மதம் தலை தூக்கினபொழுது, இராமானுஜர் போன்ற மதாச்சாரியார்களால், மதக் கட்டுப்பாட்டின் கீழ் ஹிந்து மதம் புனருத்தாரணம் பெற்றது. இராமானுஜர் சம்பிரதாயத்தில் சரணாகதி, பக்தி இவைகள் அடிப்படையாக ஏற்படுத்தப்பட்டது. இந்த முறையைப் பின்பற்றி தற்காலம் வரை, ஆங்காங்கே பஜனைகள், சத்சங்கங்கள் முதலியவைகள் கிராமங்களிலும், நகரங்களிலும் வளர்ச்சி பெற்று வருகின்றன. இதற்கு ஏற்ற வகையில், ஒவ்வொரு மாநிலத்திலும் குறைந்தது ஒரு நூற்றாண்டு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே, சங்கீதத்தின் மூலமும், கீர்த்தனைகளின் மூலமும் பக்தி இயக்கம் தோன்றின. ஆகவே நம்முடைய வரலாற்றை நோக்குகையில் முதன் முதல் கிருஷ்ண பக்தியில் தோன்றி இன்று நாமாவளி சொல்லும் பக்திவரை வந்திருக்கிறது.

கலியுகத்தில், பக்தியே உயர்ந்தது என்று அநேக புராணங்கள் கூறுகின்றன. இந்த நாம பஜனை பக்தியின் மூலம் மனிதன் தன்னை மறந்து, தன் உடலை மறந்து, இறைவன் புகழைப் பாடும் பொழுது, இறைவன் இவன் மனத்திலே குடிகொண்டு இவனை ஆனந்தப் பரவசத்தில் ஆழ்த்துகிறான். அந்த ஆனந்தத்திலே திளைத்து, உலகெல்லாம் மறந்து போகும்போது, இறைவனுக்கு ஆதாரமாயுள்ள பரமாத்மாவில் நமது ஜீவாத்மா லயிக்கிறது. அந்த ஆனந்தத்தை அடைவதற்கு இந்த மனிதப் பிறவி நமக்கு

வந்திருக்கிறது. இந்த ஆன்ம தத்துவத்தை அடைவதற்கு சொல்லிக் கொடுப்பது வழியை வகுத்துக் கொடுப்பதுதான் வேதாந்தம். இதையேதான் ஆதிசங்கரரும் தன்னுடைய ஜீவாத்மாவானது தன்னுடைய சுய ரூபத்தை சிந்தனை செய்வதே பக்தியென்று கூறுகிறார். ஆகவே வேதாந் தத்தின் பிரகாரம், ஆன்மா ஒன்றாகவே இருந்த போதிலும் இத்தனை வேற்றுமைகளும் அந்த ஒற்றுமையை அடை வதற்கு வழிகோலாக ஆகின்றன.

உதாரணமாக, நமக்குப் பசி ஏற்படுகிறது. அந்தப் பசியைத் தணித்துக்கொள்ள உணவு வேண்டியிருக்கிறது. அந்த உணவுக்காகப் பொருள் சம்பாதிக்கிறோம். சம்பா தித்த அந்தப் பொருளை வைத்துக்கொண்டு, மாடு, எரு, விதை முதலியவைகளை வாங்கிப் பூமியைச் சுத்தப்படுத்தி, உழுது, நீர் பாய்ச்சி, பிறகு விதை விதைத்து, அவ்வப்போது ஏற்படும் களைகளை நீக்கி, கொஞ்ச காலம் பொறுமையாக இருந்து, நெல் முதிர்ந்தவுடன் அறுவடை செய்து அந்த நெல்லை ஒன்று சேர்க்கிறோம். இதன் மத்தியில் தெய்வா தீனமாக பெரும் காற்றோ, பெரு மழையோ, அல்லது பூச்சி வெட்டோ ஏற்பட்டுவிட்டால் அத்தனை நெல்லும் பாழாகி விடுகிறது. இத்தனையையும் சமாளித்து நெல்லை உலர்த்தி காயவைத்து அரைத்து, உமி, தவிடுகளை அகற்றி, அரிசியாக்கி அந்த அரிசியைச் சரியான முறையில் பக்குவம் செய்து, அந்த அன்னத்திற்கு ஏற்றவாறு வெஞ்சனங்களும் தயார் செய்து உட்கொண்டால், அப்பொழுது நம் பசி தணிகிறது. இந்தப் பசியைப் போக்குவதற்கே இத்தனை வேலைகள் நடைபெறுகின்றன. அதுவும் நாம் ஒருவர் மட்டும் செய்துவிடவில்லை. இதில் பலரும் பங்கு கொள் கிறார்கள். பலனை நாம் உள்பட அனைவரும் அடைகிறோம். இந்த உடல் வளர்ச்சிக்கே, மனச் சந்தோஷத்திற்கே

இத்தனை பேரும் கூடி இத்தனை வேலைகள் செய்யவேண்டு மென்றால், அதாவது இந்த துவைதங்கள் இருக்கவேண்டு மென்றால், ஆன்ம ஒருமைப்பாட்டிற்கு, ஆன்ம தத்துவத்தை அறிந்து கொள்வதற்கும் சாதனமாக துவைதம் அவசியம் தேவையாய் உள்ளது.

ஆகவே, அத்வைதிகளுக்கு துவைதம் விரோதமில்லை. துவைதிகளும் விரோதிகளல்ல. விசிஷ்டாத் துவைதமும், விசிஷ்டாத் துவைதிகளும் விரோதமில்லை. ஆனால் அவைகள் நிஜமல்ல, நித்யமல்ல. அத்வைதத்திற்குச் சாதனமாக அமைகின்றன. அந்தச் சாதனம் எதுவரைக்கும் ஒருவனுக்குத் தேவையென்றால், அவன் எடுத்த இலட்சி யத்தை அடையும் வரையில்தான். இலட்சியத்தை அடைந்தவனுக்கு சாதனத்தினால் ஒரு உபயோகமுமில்லை. அதே சமயம் அந்தச் சாதனங்கள் அவனுக்கு விரோதமு மில்லை.

ஆகவே, அத்வைத அனுபவம் அடைந்தவனுக்கு துவைத சாதனம் தேவையற்றது. அத்வைத அனுபவத்தை அடைய விருப்பமுள்ளவனுக்கு, துவைத சாதனமானது இன்றியமையாத ஒன்றாகத் தேவைப்படுகிறது. ஆனால், அந்த துவைதமானது மஹரிஷிகளாலும், வேதங்களாலும், ஸ்மிருதிகளாலும் அங்கீகரிக்கப்பட்ட துவைதமாக இருக்க வேண்டுமே தவிர, காலங்களுக்கும் தேசங்களுக்கும் ஏற்ற வாறு இஷ்டப்படி அமைக்கப்பட்ட துவைதங்களாக இருக்கக்கூடாது. இந்த முறையிலே வரலாற்றைப் பார்த் தால், ஸ்மார்த்தர்கள் என்று சொல்லக்கூடிய வகுப்பினரே உலகம் தோன்றின காலம் முதல் அனுபவத்தில் அத்வைதி களாகவும், வாழ்க்கையில் துவைதிகளாகவும் இருந்து கொண்டு வருகின்றனர்.

ஆனால், இராமானுஜர் போன்ற மதாச்சாரியர்களுடைய தத்துவத்தின் அடிப்படையை நோக்குகையில், அதன் அனுபவத்தை நோக்குகையில், அந்த அனுபவத்தின் நிலையானது அத்வைத அனுபவத்தின் நிலைபோன்ற ஆனந்த நிலையை உணர்த்தப்பட்டிருக்கிறது, சொல்லப் பட்டிருக்கிறது. ஆகவே, கால தேசத்திற்கு ஏற்றவாறு அவ்வப்போது ஆசார, விசாரங்களில் மாற்றங்கள் ஏற்பட்டு வந்தாலும், தத்துவத்தின் அடிப்படையிலே, இலட்சியத்திலே மாறுதல் ஏற்படவில்லை. எல்லாம் ஒரே அத்வைத அனுபவம்தான். வழிகள் பல. அடையும் இலட்சியம் ஒன்றே.

அநேக திசைகளிலிருந்து அநேக நதிகள் அநேக பெயருடன் வருகின்றன. அந்த நதிகளின் ஜலம் அநேக ஜனங்களுக்கு அநேக விதமாக உபயோகப்படுத்தப்படுகிறது. ஆனால், எல்லா நதிகளின் ஜலமும் மனிதர்களுடைய உபயோகத்திற்காக பயன்படுகின்றன. சிலர் அந்த ஜலத்தை நல்ல காரியத்திற்காக உபயோகப்படுத்துகிறார்கள். சிலர் அந்த நதியின் ஜல வேகத்தில் அடித்துச் செல்லப்பட்டு, இறந்தும் விடுகின்றனர். பொதுவாக ஜனங்கள் அந்த ஜலத்தில் இறங்கி ஸ்நானம் செய்து தங்கள் உடலையும் உள்ளத்தையும் புனிதமாக்கிக் கொள்கிறார்கள்.

அந்த நதிகளுடைய ஜலமெல்லாம் எந்தத் திக்கிலிருந்து எந்தப் பெயருடன் வந்தாலும் கடைசியில் அவையெல்லாம் சமுத்திரத்தில் சேர்ந்து ஒன்றாகவே கலந்து ஒரே உப்புரசமான ஜலமாகவே ஆகிவிடுகிறது. அந்த சமுத்திரத்திலிருந்துதான் நல்முத்துக்களும் நவரத்தினங்களும் நிறையக் கிடைக்கின்றன. அந்த நன்முத்து நவரத்தினங்களுக்குப் பக்கத்தில்தான் பெரிய பெரிய திமிங்கிலங்களும் பகாசுர

மீன்களும் இருக்கின்றன. அதேபோலத்தான் அந்த சமுத்திரத்தின் கரையில் வெள்ளி போன்று ஏமாற்றம் கிளிஞ்சல்களும் கிடக்கின்றன.

இதே போலவே தேசத்தின் அநேக பாகங்களிலிருந்தும் அநேக மதாச்சாரியார்கள், மஹாபுருஷர்கள் தோன்றி, அநேக பெயர்களுடன் மத சம்பிரதாயத்தை வளர்த்து, அதில் ஆயிரக்கணக்கான மக்களை ஈடுபடுத்தினார்கள். அதில் சிலர் தீவிரவாதிகளாகவும் ஆகியிருக்கலாம். அந்தத் தீவிரத்தின் வேகத்தினால் அழிந்தவர்களாகவும் இருக்கலாம். அதேபோல் சிலர் தீயவர்களும் இருப்பார்கள். இந்தத் தத்துவத்தைக் கெட்ட செயல்களுக்கும் உபயோகப்படுத்தியிருப்பார்கள். தத்துவமறியாத சிலர், இந்தத் தத்துவங்களையே பிரம்மமாகவும் அறிந்துகொண்டிருப்பார்கள். சிறந்த மதாச்சாரியர், மஹாபுருஷர்கள் இவர்கள் அனுபவங்கள் முத்துக்கள்போன்று, நவரத்னம் போன்று விலைமதிக்க முடியாத பெரும் பொக்கிஷங்களாக இருக்கின்றன.

அந்த அருள் மொழிகளுக்கு மத்தியிலும் சில கருத்துக்கள் காலதேசத்திற்கும், தத்துவத்திற்கும் முரண்பாடாக சமுத்திரத்திலுள்ள திமிங்கிலம் போல் இருக்கத்தான் செய்யும். ஆகவே முத்தும், பவளமும் மாத்திரம் எப்படி நமக்குத் தேவையோ, நம்மைப் புனிதமாக்கிக்கொள்ள எவ்விதம் சமுத்திர ஸ்நானம் தேவையோ அதுபோல உலகில் அநேக சமயங்கள், தத்துவ விசாரங்கள் இருந்தபோதிலும், அவைகளில் மிகவும் பழங்காலம் தொட்டு வந்துகொண்டிருப்பதும், பரஸ்பரம் முரண்பாடற்று இருப்பதும், உண்மையாக உள்ளதும், அனுபவத்திற்கு ஏற்றதும், அதனால் ஒருவருக்கும் துன்பம் வராததுமான தத்துவத்தை

மாத்திரமே, ஆசார விசாரத்தை மாத்திரமே கைக்கொண்டு வந்தால், அந்தத் துவைதமானது அத்வைத அனுபவத்திற்குச் சாதனமாகவே அமையும்; ஒரு நாளும் விரோதமாக அமையாது. இப்படிப்பட்ட துவைதங்களைத்தான் வேதமும், வேதாந்தங்களும் போதிக்கின்றன.

ஒரு குளத்தின் கரையில் அநேக தென்னை மரங்கள் இருக்கின்றன. குளத்தில் ஜனங்கள் முழுகும்பொழுதோ அல்லது கையால் உளையும்பொழுதோ அந்தக் குளத்தின் ஜலம் அசைந்து ஆடுகிறது. அந்த ஜலத்தின் அசைவுக்கு ஏற்றவாறு, அந்தத் தென்னை மரங்கள் ஆடுவதுபோல் ஜலத்தில் தென்படும். ஆனால் அந்த மரங்கள் ஒன்றும் அவ்வாறு ஆடுவதில்லை. அவைகள் பூமியிலேயே ஸ்திரமாகத்தான் இருக்கின்றன. அதேபோல் ஆகாயத்தில் சந்திரன் பிரகாசிக்கிறான். அந்தக் குளத்தில் அந்தச் சந்திரனின் பிரதிபிம்பம் விழுகிறது. குளத்திலுள்ள ஜலம் அசையும்பொழுது சந்திரன் ஆடுவதுபோல் நமக்குப் புலப்படும். உண்மையில் சந்திரன் ஒன்றும் ஆடுவதில்லை. ஆனால் ஆடுவதுபோல் தெரிகிறது. அறியாதவர்கள், சிறுவர்கள் இவர்கள் சந்திரன் ஆடுகிறது, மரம் ஆடுகிறது என்றே கூறுவார்கள்.

அதுபோல் அறியாமையில் துவைதமும், கஷ்டங்களும், மனச் சஞ்சலமும் ஏற்படுகின்றன. உண்மையை அறிந்தபின் ஒரே அனுபவமும் ஏற்படும். சஞ்சலம் முதலியவைகள் இருக்காது. கண்ணில் காமாலை உள்ளவனுக்கோ வேறு தோஷமுள்ளவனுக்கோ இரண்டு சந்திரன் போலவோ, பொருள்களெல்லாம் மஞ்சள் நிறமாகவோ தெரியும். அந்தக் கண் தோஷம் நீங்கிய பிறகு ஒன்றே சந்திரன் என்ற அனுபவமும், பொருள்களில் தோன்றிய அநேக வர்ணங்களும் மறைந்து, உண்மையான பொருளின்

தன்மையும் தென்படும். இதுபோல நம்மிடமுள்ள அவித்யா தோஷம் நீங்கிவிட்டால், அறியாமை நீங்கிவிட்டால் உண்மையான ஒரு ஆன்ம அனுபவம் ஏற்பட்டுவிடும். ஆனால் கண்ணில் தோஷம் வந்தோ, தண்ணீரில் சந்திரன், மரங்கள் ஆடினதோ இவைகளெல்லாம் பொய்யாக இருந்தாலும், தோன்றினது என்னமோ உண்மையே, நிஜமே. இதைத்தான் வியாவகாரிக சத்தியம் (நிஜம்) என்று கூறுகிறார்கள். பாரமார்த்திக சத்தியம் பரம்பொருள் ஒன்றே சாஸ்வதமானது, அழிவில்லாதது, நித்யமானது. இந்த பாரமார்த்திக சத்திய அனுபவத்தின் மூலம், வியாவகாரிக சத்திய காரியங்களெல்லாம் மறைந்துவிடும். இந்த வியாவகாரிக சத்தியம் மறைகிற வரையில், வியாவகாரிக காரியங்களெல்லாம் செய்துகொண்டே இருக்கவேண்டும். இந்த வியாவகாரிக சத்தியமான காரியங்களெல்லாம் அத்வைத தத்துவ அனுபவத்திற்குச் சாதனமே!..., விரோதியல்ல. இந்த விஷயங்களைத்தான் வேதமும், வேதாந்தங்களும் போதிக்கின்றன.



